

இந்திய உப ஜனாதிபதி துணைவியார் திருமதி. இதயத்துல்லா அவர்களிடமிருந்து, தி. தி. தே. தோட்டத் துறை கண்காணிப்பாளர் திரு தம்மண்ணா அவர்கள் முதற் பரிசுக்கான வெள்ளிக் கோப்பையினைப் பெறுகின்றார்.

**அண்மையில் புது தில்லியில் ‘மலர்க்கண் காட்சி’ப் போட்டியில், ஆந்திர அரசு சார்பில் பங்கேற்ற தி. தி. தேவஸ்தானம் முதற் பரிசு பெற்றது.**



தி. தி. தே. மலர்க்கண்காட்சி அரங்கிற்கு இந்திய பிரதமர் வருகை புரிந்தபோது.



‘மலர்க்கண் காட்சி’யில் பங்கேற்ற தி. தி. தே. அரங்கு



மும்மைசால் உலகுக்கெல்லாம் மூலமந்திரத்தை முற்றும்
தம்மையே தமர்க்கு நல்கும் தனிப்பெரும் பதத்தைத்தானே
இம்மையே எழுமை நோய்க்கு மருந்தினை
ராம எனும் செம்மை சேர் நாமம்

–கம்பராமாயணம்




ஏப்ரல் 1981

மலர் 11
இதழ் 11

தனிப்பிரதி 50 காசு

வருடச் சந்தா ரூ. 6

*சிறப்பாசிரியர் :*

**திரு. பி. வி. ஆர். கே. பிரசாத், I.A.S.,**
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

*ஆசிரியர் :*

**திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.**
தி. தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

*அச்சிடுபவர் :*

**திரு. எம். விஜயகுமார் ரெட்டி,**
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

**முழு விவரங்களுக்கு:**
EDITOR
'Sapthagiri'
Alipiri Road,
TIRUPATI.

## உள்ளுறை

 

# செய்திச் சுருக்கம்

 

## நித்திய லட்டு தான அறக் கொடை

27-2-81 அன்று நடைபெற்ற தி. தி. தே. மேலாண்மைக் குழு கூட்டத்தில் "ஸ்ரீ வேங்கடேஸ்வரா நித்ய லட்டு தான அறக்கொடை" எனும் திட்டம் ஒன்றினை வருகிற தெலுங்கு வருட பிறப்பு நாள் முதற்கொண்டு அதாவது 5-4-81 முதற்கொண்டு செயற்படுத்துவதென்று முடிவு செய்யப்பட்டுள்ளது. இத்திட்டத்தின் முழுவிவரம் பின்வருமாறு:

முதலில் இத்திட்டத்தில் பங்கு கொள்ள விரும்பும் பக்தர்கள் ரூ 1 இலட்சத்தினை அறக்கொடையாக, இந்தியாவிலுள்ள எந்த வங்கி மூலமாகவாவது தி. தி. தேவஸ்தானத்திற்கு டிமாண்ட் டிராப்ட் மூலமாக (The Executive Officer, தி.தி. தேவஸ்தானம், திருப்பதி எனும் பெயரில்) செலுத்துதல் வேண்டும். இத்தொகையினுல் வருடம் ஒன்றிற்கு கிடைக்கும் வட்டித்தொகையினைக் கொண்டு, அறக்கொடை வழங்கிய பக்தர் விரும்பும் நாளன்று, (அது பிறந்தநாள். திருமணநாள், ஆண்டு நிறைவு நாள், நினைவுநாள், புதிய வியாபாரம் ஆரம்பிக்கப்பட இருந்தால் அந்நாள், அல்லதுபுதிய கணக்கு களை ஆரம்பிக்கும் நாள் போன்ற நாட்களில் எதுவாகவோ அமையலாம்) திருமலைக்கு வரும் பக்தர்களுக்கு 'படி காவலி' எனும் இடத்தில் (தற்போது இலவச அன்னதான பங்கீடு வழங்கும் இடம்) ஒவ்வொருவருக்கும் சுமார் 25 கிராம் எடையுள்ள லட்டு பிரஸாதம் (வாதுமைப் பருப்பு இல்லாதது) வழங்கப்படும். இவ்லட்டு தான அறக்கொடை நாளன்று, அப்பக்தரின் பெயரும், கோத்ரமும் திருமலைக் கோயில் கொலுவில் (சபைவில்) வாசிக்கப்படும். பின்னர் அவருக்கு ஆடை ஒன்று பஹுமானமாக வழங்கப்படுவது மட்டுமன்றி, அவருக்கு 6 சிறிய லட்டுகளும் 6 வடைகளும் பிரஸாதமாக வழங்கப்படும். மேலும் அன்று, அவரைச்சார்ந்த 5 நபர்களுக்கு இலவச தரிசனவசதி செய்துதரப்படும். நாள் ஒன்றிற்கு திருமலைக்கு சுமார் 25,000 பக்தர்கள் வருகை புரிவது குறிப்பிடத்தக்க ஒன்ருகும்.

## ஸ்ரீ வேங்கடேஸ்வரருக்கு இரண்டாம் பரிசு

22-1-81 அன்று நடைபெற்ற தமிழ்நாடு அரசின் பொங்கல் லாட்டரி குலுக்கலில் திருமலை ஸ்ரீவேங்கடேஸ்வரருக்கு இரண்டாம் பரிசுத் தொகையான ரூ. 10,000/- கிடைத்தது. இப்பரிசுக்கான பரிசுசீட்டின் எண். எப். ஒய். 743883. இச்சீட்டு பக்தர் ஒருவர் அண்மையில் உண்டியில் போட்ட 50 சீட்டுகளில் ஒன்ருகும்.

## எவ்வளவு

1-4-80 முதற்கொண்டு 31-12-80 வரை திருமலைக்கு வந்த பக்தர்களின் எண்ணிக்கை 54,02,462 இதுபோது தி. தி. தேவஸ்தான வருமானம் ரூ. 15,48,74,708.

1981-ம் ஆண்டு ஜனவரி மாதத்தின் போது திருமலைக்கு வருகை புரிந்த பக்தர்களின் எண்ணிக்கை 5,34,151. இம்மாதத்தின் தி. தி. தே. வருமானம் ரூ. 1,08,56,713.

## இடமாற்றம்

திருமலையில் உள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ வேங்கடேஸ்வரா வேத பாடசாலையும், நிலையமும்

## புரோஹிதர் சங்கம், திருமலை

### கட்டண விவரங்கள்

(செய்து வைக்க)

| | | ரூ. காசு |
|---|---|---|
| 1. | பிராமணர்கள் மற்றும் வைசியர்கள் திருமணம் | 36-00 |
| 2. | பிராமணர்கள் மற்றும் வைசியர்கள் உபநயனம் | 32-00 |
| 3. | மற்றைய திருமணங்கள் (ஹோமம் இன்றி) | 22-00 |
| 4. | மற்றைய திருமணங்கள் (ஹோமம் மற்றும் கன்னியாதானம் உள்ளிட்டது) | 34-00 |
| 5. | சத்ய நாராயண விரதம் | 18-00 |
| 6. | கேஸ கண்டனம் மற்றும் மற்றைய பூசைகள் | 8-00 |
| 7. | பிண்ட பிரதானம் | 5-00 |
| 8. | ஹிரண்ய கோதானம் | 6-00 |
| 9. | அன்னதானம் | 3-00 |
| 10. | சாளிக்ராம தானம் | 1-25 |
| 11. | சங்கல்பம் | 1-00 |
| 12. | ஷோடஸ மகாதானம் | 16-00 |
| 13. | தாஸ தானம் | 10-00 |
| 14. | நவக்ரஹ தானம் | 9-00 |
| 15. | சங்கல்பம், பூசை | 1-00 |

சந்திரகிரிக்கு அருகு உள்ள நரசிங்கா புரத்திற்கு மாற்றப்பட்டுள்ளது.

## முதலாண்டு விழா

தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ ஸ்ரீ வேங்கடேஸ்வரா கலாபீடத்தின் முதலாண்டு விழாவும், ஸ்ரீ புரந்தர தாசரின் ஆராதனை விழாவும் திருப்பதி ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் வெகு விமர்சையாக 8–3–81 அன்று கொண்டாடப் பட்டது. அன்று மாலை மேற்படி கலா பீடத்தின் 'சபாரஞ்சனி' குழுவினரின் இசை நிகழ்ச்சிக்குப் பிறகு விழா இனிது துவங்கியது.

கலாபீடத்தின் சிறப்பு அலுவலர் திரு. பி. ரஜினிகாந்தராவ் அவர்களின் வரவேற்புரையைத் தொடர்ந்து, விழாவின் சிறப்பு விருந்தினராக பங்கேற்ற, ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக்கழகக் கல்லூரியின் முதல்வர் டாக்டர் ஜி. என். ரெட்டி அவர்கள் தம் சிறப்புரையில் ஆந்திராவில் மட்டுமன்றி, தென்னாட்டில் பல்வேறு இடங்களில் பல்வேறு மரபு வழிவந்த இசைப்புலவர்கள் பலர் உள்ளனர் என்றும், அவர்களாலும், அவர்களுடைய முன்னோர்களாலும் இயற்றப்பட்ட பல பாடல்கள் இருக்கின்றன என்றும், அவற்றை வெளிக்கொணரவேண்டியது அவசியமான ஒன்றாகும் என்று கூறினார். பின்னர் கலாபீடத்தின் ஓவியரான திரு. நாராயணகிரி தத் அவர்களால் தீட்டப்பட்ட புரந்தரதாஸரின் வண்ண ஓவியத்தினை, டாக்டர். ஜி. என். ரெட்டி அவர்கள் திறந்து வைத்தார். பின்னர் மேற்படி கலா பீடத்தின் சங்கீத சபா ஆதரவில் இசை நிகழ்ச்சி ஒன்று நடைபெற்றது.

## மலர்க்கண் காட்சி

அனைத்திந்திய அளவில் 15-1-81 அன்று இந்தியத் தலைநகரமான தில்லியில் மாபெரும் மலர்க் கண் காட்சி ஒன்று, புதுதில்லி வை. எம். சி. ஏ. ஆதரவில் நடைபெற்றது. இக்கண் காட்சியில், ஆந்திர மாநிலத்தின் பிரதிநிதியாக தி. தி. தேவஸ் தானத்தின் தோட்டத் துறை பங்கேற்று முதல் பரிசு மட்டுமன்றி, பெருமைக்குரிய, திரு. ஆர். டி. பிர்லா அவர்களால் ஏற்படுத்தப் பட்ட, கலப்பற்ற வெள்ளியால் தயாரிக்கப்பட்ட கோப்பையினையும் பெற்றது. இப் போட்டி முடிவு, புகழ்பெற்ற தோட்டக்கலை நிபுணர்களான டாக்டர். பால், டாக்டர். ரந்தாவா, திருமதி. எலிஸபெத் தாம்ஸன் ஆகியோர்களால் நிர்ணயிக்கப்பட்டது.

இம் மலர்க்கண் காட்சியில் தி. தி. தேவஸ்தானத்தின் தோட்டத்துறையைச் சார்ந்த சுமார் 400 பூச்செடி வகைகளும், 1400வகை மலர் வகைகளும் வைக்கப்பட்டன. பல்வேறு மலர் இதழ்களால் ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி, மற்றும் சிவலிங்க உருவங்கள் உருவாக்கப்பட்டு, அவை கூட்டத்தினரை வெகுவாகக் கவர்ந்தன. பல்வேறு வகையில் மலர்ப் பூங்கொத்துக்களும், பெண்களின் பல்வேறுவகையான தலைமுடி அலங்காரங்களும் தேவஸ்தானகைவேலைப் பாடு நிபுணர்களால் செய்யப்பட்டு, அவை கண்காட்சியில் வைக்கப் பட்டன. மேலும் ஆந்திராவில் மற்றும் தி. தி. தேவஸ்தான தோட்டத்தில் விளைந்த பல்வேறுவகையான காய்கறிகளும் கண்காட்சியில் இடம் பெற்றன.

முதல் பரிசை, தி.தி.தே. சார்பில், தி.தி.தே. தோட்டத்துறையின் கண்காணிப்பாளர் திரு. தம்மண்ணா அவர்கள் இந்திய உபஜனாதிபதியின் துணைவியார் திருமதி. இதயத்துல்லா அவர்களிடமிருந்து இதற்கென ஏற்பாடு செய்யப்பட்ட விழாவின் போது பெற்றுக் கொண்டார்.

இம்மலர்க்கண் காட்சியின் போது இந்தியப் பிரதமர் திருமதி. இந்திரா காந்தி அவர்கள் தி. தி. தே. அரங்கிற்கு வருகை புரிந்து, தி. தி. தேவஸ்தானத்தாரால் பிரசுரிக்கப் பட்ட "திருமலைத் தோட்டம்" எனும் சிறப்பு மலர் ஒன்றினை வெளியிட்டார்.

## இராமனும்-சிவனும்

தஞ்சை மாவட்டம் பாபநாசத்தில் 108 சிவாலயம் என்ற ஆலயம் உள்ளது. இது சிவபக்தர்களும், விஷ்ணு பக்தர்களும் இரு சாராரும் ஒருங்கித்து மகிழக்கூடிய பெருமை வாய்ந்த ஆலயம். ஆலயத்தின் சிவலிங்கத்திற்குப் பெயர் 'ஸ்ரீ இராமலிங்கம்' இந்த ஆலயத்தில் ஸ்ரீராமர் பிரதிஷ்டை செய்த மிகப்பெரிய அனுமந்தலிங்கம் வடபுறத்தில் உள்ளது. ஒருபுறம் சிவலிங்கத்திற்கு ஸ்ரீராம பிரான் சீதாப்பிராட்டியுடனும், இளவல் இலட்சுமணனுடனும், ஸ்ரீ அனுமானுடனும் பூஜை செய்யும் அற்புதமான காட்சி கருங்கல் சிற்பத்தில் விளங்குகிறது.

நேரில்கண்டு எழுதியவர்: பி. கலாநிதி
பாபநாசம்

## ஸ்ரீ குலசேகர ஆழ்வார் திரு நக்ஷத்திர திருநாள்

ஸ்ரீ குலசேகர ஆழ்வார் பரமபதமடைந்த வேதபுரி என்ற (இராஜேந்திர விண்ணகர்) மன்னார் கோவிலில், மாசிப்புனர் பூச திருநட்சத்திர திருநாள்வைபவம் பக்தகோடிகள்முயற்சியாலும் T.V.S. சாரிடியின் உதவியாலும் 16-2-81–ல் அன்று வெகு விமரிசையாய் நடைபெற்றது.

காலையில், ஸ்ரீ வேத நாராயணப் பெருமாள் ஸ்ரீ குலசேகர ஆழ்வாருடன் புறப்பாடாக ஸ்ரீ குலசேகர ஆழ்வார் திருக்கோயிலுக்கு எழுந்தருளினார். பின் வைதீக முறைப்படி வேதவிற்பன்னர்கள் ஸ்ரீ புருஷ சூக்த உபநிஷத் பாராயணத்துடன் பெருமாள் திருமஞ்சனம் கொண்டருளினார்.

ஸ்ரீ வைஷ்ணவ அந்தணர்களால் திவ்யப்பிரபந்தப் பாசுரங்கள், ஸ்ரீ முகுந்தமாலை சேவிக்கப் பெற்றன.

மாலையில் ஆழ்வாருடன் பெருமாள் தோளுக்கு இனியானில் இராமானுஜ நூற்றந்தாதி சேவையுடன் உள் வீதி எழுந்தருளியது கண்கொள்ளா காக்ஷியாக இருந்தது.

இவ்வைபவம் இனிது நடைபெற 2–வது தீர்த்தம் ஸ்ரீ பெரிய நம்பி ஜீயர், ஸ்ரீநிவாசாச்சாரியர் சுவாமிகள் முயற்சி போற்றத்தக்கது.

தகவல்: திரு. எஸ். கணபதீஸ்வர பிள்ளை
மன்னார்கோயில்

# ஸ்ரீ இராம கீதை

திரு. எஸ். கிருஷ்ணசுவாமி ஐயங்கார்,
திருவள்ளூர்.

பாரதயுத்தம் ஆரம்பிப்பதற்கு முன், பாண்டவ கௌரவ சேனைகளின் அணிவகுப்புக்களுக்கு மத்தியில் அர்ஜுனனுடைய ரதம், அவன் கோரிய படிக்கு பார்த்தசாரதியால் நிறுத்தப்படுகிறது. சைன்யங்களைக் கண்ணுறும் அர்ஜுனன், யுத்தத்தின் முடிவில் ஏற்படக் கூடிய அழிவை நினைத்துக் கலங்கி, வெலவெலத்துப் போய், யுத்தமே வேண்டியதில்லை என்ற தீர்மானத்துடன் சோர்ந்து போய் காண்டீபம் கையிலிருந்து நழுவ ரதத்தில் சாய்ந்து விடுகிறான். அப்போது அவனைத்தேற்றி கண்ணன் கூறிய (அறிவுரைகள்) உபதேசங்கள் பகவத் கீதை என்றும் கண்ணன் காட்டியவழி என்றும் பதினெட்டு அத்யாயமாகப் பிரசித்தமாகி உள்ளது.

அதேபோல, இராமன் வனவாசத்தை மேற்கொண்டு சித்ர கூடத்தில் வசித்து வந்த சமயம் பரதன் வந்து அடிதொழுது நின்ற சந்தர்ப்பத்தில் இராமன் பரதனுக்குச் செய்த உபதேசத்தை வால்மீகி பகவான் அயோத்யாகாண்டத்தில் 105-வது சர்க்கத்தில் 14-வது முதல் 31-வது உள்பட பதினெட்டு சுலோகங்களை ஆன்றோர் இராமகீதை என்று வர்ணித்துள்ளார்கள். அவை ஏற்படக் காரணமான சூழ் நிலையையும் அவற்றின் சாராம்சங்களையும் ஆராய்வோம்.



சித்ர கூடத்திற்கு பரிவாரங்களுடன் வந்து சேரும் பரதன், இராமனைத் தெண்டனிட்டு விழுந்திருக்கும் சமயம் இராமன் பரதனை எழுப்பி அணைத்துக்கொண்டு அளவளாவுகிறான். பரதன் முடி சூட்டப்பட்டு அயோத்தியில் ஆனந்தமாயிருக்க வேண்டிய சந்தர்ப்பத்தில், அரண்யத்திற்குவரவும் அதுவும் தன்னைப்போல் தவவேடம் தாங்கி இருக்கவும் காரணம்யாதென்று அறியாததால், பரதனைப் பார்த்துப்பல கேள்விகளைக்கேட்கிறான். தசரதன் உயிருடனில்லையோ என்றும் சந்தேகிக்கிறான். பரதன் அரசபதவி ஏற்றிருக்கலாமென்று நினைத்து, இராஜ விதிப்படி இராஜ்யம் நடத்தப்படுகிறதா என்று கேட்கும் சந்தர்ப்பத்தில் வால்மீகி பகவான் அரசியலை எல்லாவிதமான கோணங்களிலும் அலசி விடுகிறார்.

தசரதனின் வியோகம் அறிவிக்கப்பட்டு இராமன் ஈமக்கடன்களை முடித்ததும், சபை கூடுகிறது. பரதன் தன்னுடைய தாயின் தவறுகாரணமாக ஏற்பட்ட முறையற்ற செயலுக்கு வருந்தி, இராமனை அயோத்திக்குத் திரும்பி எழுந்தருளி முடி சூட்டிக் கொள்ளும் படி வேண்டுகிறான். கைகேயியும் மனம் மாறி விட்டாள் என்றும், அவளும் இராம பட்டாபிஷேகத்திற்கு இசைந்துள்

ளான் என்றும் தெரிவிக்கிறான். இதற்கு உத்திரம் அருளும் இராமன் அகண்ட சாம்ராஜ்யத்துக்கு உரியவனான தந்தை தசரதன், அதைப் பங்கீடு செய்யவும் உரிமை பெற்றவனென்றும், தந்தை பகிர்ந்து கொடுத்த படிக்கு, பரதன் நாட்டையும் இராமன் காட்டையும் ஆளுவதே முறை என்றும் சமாதானம் சொல்கிறான். பரதன் இராஜ்ய பாரம் வகிப்பதற்குத் தனக்கு எவ்விதத்தகுதியும் இல்லை என்று பல உபமானங்களைக்காட்டி எடுத்துரைக்கிறான். வெள்ளத்தால் உடைபட்ட அணைபோல இருக்கும் அயோத்தி அரசை நிலைநிறுத்தி நிறுவ இராமனுக்குத்தான் சக்தி உண்டு என்றும், இராமனுடைய அரசைத் தான் மேற்கொள்ள முயல்வது, குதிரையின் நடையைக் கழுதை அப்யசிப்பது போலவும், கருடனின் வேகத்தை இதர பக்ஷிகள் அபேக்ஷிப்பது போலவும் உள்ளது என்கிறான். மேலும், ஒருவன் சிரமப்பட்டு ஒரு செடியை வளர்க்கும் போது, அது அடி பருத்து உயர்ந்து பெரிய மரமாகிப் புஷ்பித்துப் பலன் தரும் தருணத்தில், குள்ளனாக இருப்பவன் ஒருவன் அந்தப் பலன்களை எப்படி அடைவது அசாத்யமோ,அவ்வாறு இராஜ்ய பாரத்தை ஏற்றுக் கொள்வதற்குத் தான் அசக்தனென்றும், செடியை வளர்த்துப் பலனை எதிர்ப் பார்த்தவனைப் போல இருந்த தசரதனுடைய எண்ணமும் சந்தோஷமும் வீணாகக் கூடாதென்றும் கூறுகிறான். இந்த வார்த்தைகளைக் கேட்கும் இராமன் பரதனுடைய மனக்கலக்கத்தை உணர்ந்து கொண்டு அவனுக்கு அளிக்கும் உத்திரமே இராமகீதை எனப்படும்.

துக்கத்துடனும், சோகத்துடனும் இருக்கும் அர்ஜுனனைப் பார்த்துக் கண்ணன் தேற்றிக் கூற ஆரம்பிக்கிறான் என்று பகவத் கீதையில் கூறப்பட்டுள்ளது போலவே, நல்லொழுக்கமும் தைர்யமுள்ள இராமன், துக்கித்து மனம் கலங்கி

# ஸ்ரீராமர் ஜாதகம்

| | | | |
|---|---|---|---|
| சுக்கிரன் | சூரியன் புதன் | | கேது |
| | ராசி சக்கரம் | | லக்னம் குரு சந்திரன் |
| செவ்வாய் | | | |
| ராகு | | சனி | |

ததஸ்ச த்$^{3}$வாத$^{3}$ஸே மாஸே சைத்ரே நாவமிகே திதெ$^{2}$ள ।
நக்ஷத்ரே(அ) தி$^{3}$தி தை$^{3}$வத்யே ஸ்வோச்ச ஸம்ஸ்தே$^{2}$ஷு பஞ்சஸு ।।
க்$^{3}$ரஹேஷு கர்க்கடே லக்$^{3}$நே வாக்பதா விந்து$^{3}$நா ஸஹ ।
ப்ரோத்$^{3}$யமாநே ஜகந்நாத$^{2}$ம் ஸர்வலோக நமஸ்க்ருதம் ।।
கௌஸல்யா ஜநயத்$^{3}$ ராமம் ஸர்வலக்ஷண ஸம்யுதம் ।।

—ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்.

" ஆயிடைப் பருவம் வந்(து) அடைந்த எல்லையின்
மாயிரு புவிமகள் மகிழ்வின் ஓங்கிட
வேய்புனர் பூசமும் விண்ணுளோர்புகழ்
தூயகர்க் கடகமும் எழுந்து துள்ளவே."

—கம்பராமாயணம்.

ஸ்ரிய: பதியான ஸ்ரீமந் நாராயணனுடைய அவதாரங்களில் முக்கியமானது ஸ்ரீராமவதாரம். ஸ்ரீ ராமபிரானுடைய ஜனன ஜாதகத்தில் ஐந்து கிரஹங்கள் உச்ச ஸ்தானத்தில் இருக்கின்றன. எனவே இந்த மஹா ஸ்ரேஷ்டமான ஜாதகத்தை பூஜா மண்டபத்தில் எழுந்தருளப்பண்ணி தினந்தோறும் சிரத்தையுடன் ஆராதிப்பது நலம். இந்தப் புனிதமான ஜாதகத்தை வைத்திருப்பவர்களுக்கும் ஜாதக ரீதியாக ஏற்பட்டிருக்கும் நவக்ரஹ தோஷ நிவிருத்தியும், ஸர்வ வியாதி நிவிருத்தியும், ஐஸ்வர்ய அபிவிருத்தியும், ஆயுள், ஆரோக்யம் முதலான ஸகல பாக்ய அபிவிருத்திகளும் ஸ்ரீ சக்கரவர்த்தித் திருமகன் திருவருளால் ஏற்படுவது திண்ணம் என்பது ஸர்வ சாஸ்த்ர ஸம்மதம்.

-ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம் ஸுந்தரகாண்ட மொழிபெயர்ப்பிலிருந்து.

திரட்டியவர்: திரு. வி. ராதாகிருஷ்ணன், சென்னை - 15

அழுது கொண்டிருக்கும் பரதனை அன்புமொழிகளால் தேற்றுவதாக இராமகீதை ஆரம்பமாகிறது.

இது முதலாவது ச்லோகம். இதற்குப் பிறகுள்ள பதினேழு ச்லோகங்கள் தத்வ விளக்கமாக அமைந்துள் ளன. அவையாவன:

'எந்த ஜீவனும் சுதந்திரமுடையவனும் தன்னிஷ்டப்படி செயல்பட முடிந்தவனுமன்று. இறைவன் ஜீவனை தன்னுடைய கைப்பொம்மையாக ஆட்டுவிக்கிறான். அவன் இழுக்கும் இழுப்புக்கெல்லாம் ஒவ்வொரு ஜீவனும் உட்பட வேண்டியவனாகிறான்.

பொருளும், பொன்னும் போன்ற சேகரம் செய்யப்படும் வஸ்துக்கள் யாவும், எவ்வளவு சேர்க்கப்பட்டாலும் முடிவில் அழிவை அடைபவைகளே. உயர்ந்த ஸ்தானத்தை அடையும் எவனுக்கும் ஒருநாள் தாழ்ச்சியும் வீழ்ச்சியும் ஏற்படவே செய்யும். மனைவி, மக்கள், உற்றார், உறவினர் என்று ஏற்படும் பந்தம் பிறக்கும் போது ஏற்பட்டு சிறிதுகாலம் இருந்து, ஒருநாள் (இறக்கும்போது) நிச்சயமாக நீங்கக் கூடியவைகளே யாகும்.

மரத்தில் பழுக்கும் பழங்களுக்கு எந்த நேரத்தில் மரத்திலிருந்து உதிர்ந்து விழ நேருமோ என்ற பயம் இருந்துகொண்டே இருப்பதுபோல, உலகில் பிறக்கும் ஒவ்வொரு மனிதனுக்கும் சாவைக் காட்டிலும் அதிகமான வேறு எவ்வித பயமும் கிடையாது.

மிக உறுதியான கம்பங்களுடன் பலமாகக் கட்டப்படும் கட்டிடங்களும், காலகதியில் அழிந்து போகின்றன அல்லவா! அதைப்போலவே, மனிதர்களும், முதுமைக்கும் மிருத்யுவுக்கும் வசப்பட்டு நசிக்கிறார்கள்.

கழிந்து போகும் இரவு திரும்பி வருவது இல்லை. அதைப்போல, ஜலம் நிறைந்த யமுனை, சமுத்ரத்தை நோக்கி ஓடி சங்கமமாகி விடுகிறதே தவிர, சமுத்ரத்தினின்றும் திரும்புவது கிடையாது.

வெயிற்காலத்தில் சூர்ய கிரணங்கள் நீரை உறிஞ்சி நீர் நிலைகளைவற்றடிப்பதைப் போல, இவ்வுலகில் பகலும், இரவும் மாறி மாறி வந்து பிராணிகளின் வாழ்நாட்களைஅறுத்து அழிக்கும் வாட்களாகும்,

நீ (உட்காருதல், நடத்தல் முதலிய) எந்த நிலையில் இருந்தாலும், உன்னுடைய ஆயுள் குறைந்து கொண்டே போகிறது. அதைத் தடுக்க முடியாது நீ, அயலாரின் அவதியையும் அழிவையும் குறித்து ஏன் வருத்தப்படவேண்டும்.

ம்ருத்யு, கூடவே இருக்கிறது, நடக்கும்போது ஒருவனைத் தொடர்கிறது, அவனுடன் திரும்பி வருகிறது. உட்காரும் போதும், எழுந்திருக்கும் போதும், எவ்வளவு தூரம் போய் வந்தாலும் விட்டுப் பிரிவது கிடையாது. அதனை எவனாலாவது விலக்கி அப்புறத்தப்படுத்த முடியுமா? அவயவங்களில், காலக்ரமத்தில் மடிப்புகள் ஏற்படுகின்றன. கிழத்தனமடையும் போது தலை மயிர்கள் வெண்மை நிறமடைகின்றன. இவற்றைத் தடுக்க எவனுக்காவது சாமர்த்தியம் உண்டா. (நரை, திரை, மூப்பினின்று தப்ப முடியுமா)

சூரியன் உதிப்பதைப் பார்க்கும் மனிதன், பொருளீட்டும் சமயம் வந்ததென்றுசந்தோஷத்துடன் அந்த முயற்சியில் ஈடுபடுகிறான். அதே போலப் பொழுது அஸ்தமிக்கும் போது பல இன்பநினைவுகளில் தன்னை மறந்து சந்தோஷிக்கிறான். ஆனால் ஒரு பகலும் ஒரு இரவும் வந்து தன் வாழ்நாள் வீணாவதை (நசிப்பதை) நினைக்கிறானா.

ருதுக்கள் மாறி மாறி வரும்போது அவற்றிற்கேற்ற சுகபோகங்களை நினைத்துத் திளைக்கிறோமே தவிர, அதனால் ஆயுள் நசித்து வருவதைக் குறித்துத் துயரப்படுகிறோமா.

மஹா சமுத்ரத்தில் அலைகள் பொங்கி வந்தபடியே இருக்கின்றன. தனித்தனியே மிதந்து கொண்டிருக்கும் கட்டைகள், ஒவ்வொரு சமயம் ஒரு அலையினால் ஒன்று சேர்க்கப்பட்டு சிறிது காலம் ஒன்றாகச் சென்று, பிறகு மற்றொரு அலையால் பிரிக்கப்பட்டு, திசை மாறிச் சென்று விடுகின்றன. அதுபோலவே, மனைவி, புத்ரர், பந்து, தனம் எனப்படுபவைகள் யாவும். இவைகள் என்றும் அநித்யமே தவிர சாச்வதமில்லையல்லவா.

இவ்வுலகில் எந்த பிராணியும், தன்னிஷ்டப்படி செயல் படவும், நடக்கவும் முடியாது. ஆகவே, இறப்பைத் தடுக்க முடியாதவனுக்கு அதைப்பற்றி துக்கப்படுவதினால் கிட்டும் பயன் யாது. இறந்தவனைத் துக்கத்தினால் பிழைப்பிக்க முடியுமா.

ஒரு சிலர் கூட்டமாக வழி நடந்து போகும் போது வேறொரு வழிப்போக்கன், "நீங்கள் செல்லுங்கள், நானும் பின்னால் வருகிறேன்" என்பதைப் போல, இப்படிக்கே தலைமுறை தலை முறையாக முன்னோர்களால் பின்பற்றப்பட்ட மார்க்கத்தையும் மரபையும் யாவரும் பின்பற்ற வேண்டுமே தவிர அதைக் கை விடக்கூடாது. தவிர அது சாத்யமுமல்ல. அப்படிப்பட்ட மரபு, ஒழுக்கத்தைக் கைக் கொள்பவன் துயரடைய முடியுமா.

அணைகடந்து செல்லும் வெள்ளம் திரும்பி வராததைப் போல, ஆயுள் கடந்து கொண்டே இருக்கும்போது, மனத்தை, தர்ம மார்க்கத்தை அனுசரித்த வழிகளில் ஈடுபடுத்திச் சுகம் அடைபவர்களே மனிதர்கள் என்று சொல்லத் தகுதி பெற்றவர்கள் ஆவார்கள்.

இவ்விதம் உரைத்த, அன்பும் ஆச்வாஸமும் நிறைந்த மொழிகளே இராமகீதை எனப்படுகின்றது.



# ராமபக்தி சாம்ராஜ்யம் ★

திரு. ஏ.ஆர். ஸ்ரீனிவாஸ சர்மா
சென்னை.

ஸ்ரீமத் ராமாயணத்தின் கதா நாயகனை ஸ்ரீராமசந்த்ர மூர்த்தியிடம் பக்தியும் அன்பும் பூண்டவர்கள் எத்தனையோ பேர்கள். அவர்களில் முக்கியமாகக் குறிப்பிடத் தக்கவர்கள் மூவர். அவர்கள் வேடுவனை குகன், வானரனை சுக்ரீவன், அரக்கனை விபீஷணன். அவர்கள் தன்மீது கொண்டுள்ள அன்பின் ஆழத்தை நன்குணர்ந்த காரணத்தினல் அல்லவா ரகுராமன், முறையே குகப்பெருமானையும், சுக்ரீவ மகாராஜனையும், விபீஷணுழ்வாரையும் 'உன்னுடன் ஐவரானேம்,உன்னுடன் அறுவரானேம், உன்னுடன் எழுவரானேம்' என்று குறிப்பிடுகின்ருர். அவர்களை ராமசந்திரன் ஏன் தன் உடன் பிறந்த தம்பிமார்களாகக் குறிப்பிட்டார்? உடன் பிறந்தவன் என்று கூறுவதில் பெருமைப்பட்ட காலம் ரகுவீரன் வாழ்ந்த காலம்! அப்படித்தான் கொள்ள வேண்டியிருக்கிறது.

நிற்க, ரகுவீரன் குறிப்பிட்ட முதல் உடன் பிறந்தவனும் குகப்பெருமானைப்பற்றி இப்போது பார்ப்போம்! ராமன்மீது அவன் கொண்டிருந்த பக்தியைக் கம்பர் கூறுவது:

'கண்ணனைக் கண்ணின் நோக்கிக்
களித்தனன் இருண்ட குஞ்சி
மண்ணுறப் பணிந்து மேனி வளைத்து
வாய்புதைத்து நின்ருன்.'

கங்கைக் கரையில் தம்பியோடும் பிராட்டியோடும் நிற்கும் அண்ணலைக் கண்ட குகன், மகிழ்ச்சி பொங்க, தரையில் விழுந்து வணங்கி, உடலைக் குறுகி வளைத்து வாய் புதைத்து நின்ருன். இப்படிச் செய்வது பக்தியையும் அன்பையும் உள்ளக்களிப்பையும் வெளியிடும் தடையம்.

இந்தக் குகப்பெருமான், பின்னல் இன்னெரு சூழ்நிலையில் கண்களில் தீப்பொறிப் பரக்கக் கடுஞ்சினம் அடைகின்ருன்?

தம்பி பரதாழ்வர், அண்ணவின் பேரில் கொண்ட பரம பிரேமையினுலும், பக்தியினுலும், கானகம் ஏகிய திருமகனைக் கெஞ்சிப் பிரார்த்தித்து, மீண்டும் அயோத்தி மாநகருக்கு அழைத்துச் சென்று ராஜ்யாபிஷேகம் செய்து வைக்க வேண்டும் என்ற துடிப்புடன், பெருஞ்சேனையுடன் வருகின்ருன். இந்தக் காட்சியைத் தொலைவிலிருந்து கண்ணுறும் குகன் என்ன நினைக்கிருன்? தன் தமையனைக் காட்டுக்கு விரட்டியதுபோதாதென்று, மேலும் துன்புறுத்தும் நோக்குடன்தான் இத்தனை பெருஞ்சேனைகளுடன் வருகின்ருன் பரதன் என்று தவருக எடை போட்டுக் கோபத்தினல் கொக்கரிக்கின்ருன்.

"குகனெனப் பெயரிய கூற்றின்
ஆற்றலான்
தொகைமுரண் சேனையைத் துகளி
நோக்குவான்,
நகைமிகக் கண்கள் தீ நாரநாசியில்
புகையுறக் குனிப்புறும் புருவப்
போர்விலான்."

—(கம்பர்.)

ஆனல் அதே குகன், பரதன் அருகில் நெருங்கி வருவதைக் கண்ணுற்று அதிர்ச்சியடைந்து செயலற்று நிற்கின்ருன்.

மரவுரியுடனும் தூசு படிந்த மேனியுடனும் துயரம் தாங்கும் முகத்துடனும் கூடிய பரதாழ்வாரைக் கண்ணுற்ற குகன் ஏன் அதிர்ச்சியடைய மாட்டான்? ஏன் அவன் கையிலுள்ள வில் நழுவிக் கீழே விழாது? ஏன் அவன் விம்மிக் கதற மாட்டான்? அண்ணன்மீது ஆத்திரமும் க்ஷாத்திரமும் கொண்டிருந்தால், இப்படியா இருக்கும் பரதனுடைய தோற்றம்?......

மேலும் நெருக்கத்தில் வந்த பரதனை இன்னும் உன்னிப்புடன் நோக்கும் குகப்பெருமானுக்கு என்ன தோன்றுகிறது?

இந்த பரதனைப் பார்க்கும்போது ராமனுடைய சாயல் அப்படியே காட்டுகின்றது. இவன் பக்கலில் இருக்கும் சத்துருக்னனுடைய தோற்றமும் லட்சுமணனுடையது போலவே காணப்படுகிறது. ராமச்சந்திரனைப் போலவே இவனும் தவக்கோலத்துடன் காட்சி தருவது மட்டுமல்லாமல், ராமன் சென்ற திசை நோக்கித் தொழுகின்ருன். எனவே இவன் அண்ணன்மீதுள்ள பக்தியுடன்கூடியசகோதரப்பிரேமையுடன்தான் வந்திருக்கிருன். இன்னென்று. ராமனுக்குத் தம்பியாய்ப் பிறந்திருக்கும் ஒருவன் அண்ணனுக்குத் தீங்கு எண்ணுவானே?...இப்படி எண்ணித் தெளிகின்ருன் குகன்.

'எம்பெருமான் பின்பிறந்தார் இழைப்பரோ பிழைப்பென்ருன்?'

என்பது கம்பர் கூற்று!

இப்படி குகன் பரதன் பேரில் தவருன எண்ணம் கொண்டதற்கு அடிப்படைக் காரணம், ராமன்பால் அவன் கொண்டுள்ள பக்தி சாம்ராஜ்யமே!



# கிழமைகள்

கொட்டையூர் தம்பு
திரு. ப. கிருஷ்ணஸ்வாமி

## தொன்மை

யூதர்கள் வாரத்தின் இறுதி நாளை ஓய்வுநாளாக (Sabbath day)க் கொண்டிருந்தனர் என்பதைச் சரித்திர வாயிலாக அறிகிறோம். இதிலிருந்து இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பிலிருந்தே 7 நாட்கள் கொண்ட வாரம் என்ற கால அளவமைப்பு இருந்து வந்துள்ளது என்பது அறியப்படுகிறது. இந்த நாட்கள் பண்டைக்கால ஐரோப்பியக்கடவுளர்களான டூஏஸ், ஓடன், தார், ஃப்ரியா முதலியோர் களது பெயரால் அழைக்கப்பட்டன. பின் வந்த கிறிஸ்துவ பஞ்சாங்க அமைப்பாளர்கள் பிரபலமடைந்து பிரசாரத்திலிருந்த இந்தப் பெயர்களையே, தங்களுடைய வார நாட்களின்பெயராகக்கொண்டனர். உலகில் பல்வேறு மதத்தினரும், நாட்டினரும் காலத்தினரும் ஒரே நாளையே சூரியனுக்குரிய நாளாக அதாவது ஞாயிற்றுக் கிழமையாகக் கொண்டிருப்பது நமக்கு வியப்பைத் தருவதுடன் ஓரிடத்தில் தோன்றிப் பரவின கருத்து இது என்பதும் தெரியவருகிறது.

## தொன்மையிலும் தொன்மை

இந்தியாவில் மிகப்பழமையான காலத்திலிருந்தே ஜ்யோதிஷ அடிப்படையில் வாரநாட்கள் பெயரிடப்பட்டிருந்தன. வாராதிபர்களை எடுத்துப்பேச வந்த அதர்வ வேதம் தற்பொழுதுள்ள வரிசையிலேயே படிக்கின்றது. வேதகால ஜ்யோதிஷ கணிதம் நக்ஷத்ர அடிப்படையில் அமைந்து வளர்ந்திருந்தமையால் நம்முடைய இலக்கியங்களில் சுமார் 1600 ஆண்டுகட்கு முன்பு வரை வார நாட்களின் பிரஸ்தாபம் அதிகம் காணப்படுவதில்லை. இருப்பினும் நாட்களை வரையறை செய்யும் பொழுது (Cross checking) சரிபார்த்துக் கொள்ள இவ்வார அமைப்பு பயன்பட்டு வந்தது. இன்றும் பயன்பட்டு வருகின்றது. பழமையான இதிகாசங்களில் வார நாட் குறிப்புகள் உள. வால்மீகி ராமாயணம், அயோத்தியா காண்டம் 2ஆம் ஸர்க்கத்தில் காட்டிற்குப் புறப்படும் நாளினைக் கூறவந்தவால்மீகி, ஸீதை வாயிலாக ''ராமபிரானே! இன்று வியாழக்கிழமை; புஷ்ய நக்ஷத்திரத் தோடுக் கூடியது' என்று கூறுகின்றார்.

''அத்ய பார்ஹஸ்பத**ஃ** ஸ்ரீமான் யுக்த**ஃ**
புஷ்யேண ராகவ''

என்பது ஸ்லோகம். பார்ஹஸ்பத**ஃ** ஸ்ரீமான் என்ற இச்சொற்கள் வியாழக்கிழமையைக் குறிப்பன. புஷ்யேண யுக்த**ஃ** என்பது புஷ்ய நக்ஷத்திரத் தோடு கூடியுள்ளது என்பதைக் கூறுவன. மகாபாரதத்தில் அஸ்வமேத பர்வத்தில் வெளிப்படையாக ஞாயிற்றுக் கிழமையன்று பாண்டவர்கள் தங்கத்தைத் தேடிக்கொண்டு புறப்பட்டனர் என்று கிழமை வியக்தமாகவே பேசப்பட்டுள்ளது.

## அமைப்பு

நம் முன்னோர்கள் கிரஹரீதியில் வான சாஸ்திர ஜ்யோதிஷ அடிப்படையில் தோற்றுவித்த இந்த 7 வார நாட் கணிதம் அன்றுபோல் இன்று வரை மாறுபாடின்றி நம் நாட்டில் மட்டுமே இறங்கி வருகின்றது. பிற இடங்களில் அயர்வு மயர்வு மயக்குகளால் பெயர்களில் சிறு மாறுதல்கள் தோன்றியுள்ளன. நம்முன்னோர்கள் ஒரு நாளை 24 கூறுக்கி ஒவ்வொரு கூறினையும் 'ஹோரா' என்றழைத்தனர். இந்த ஓரை என்ற சொல் தொல்காப்பியத்திலும் பயின்று வந்துள்ளமையால் இச்சொல்லின் தொன்மையினை அறிக. அந்த ஓரை அடிப்படையிலேயே வாரநாட்கள் தோன்றியுள்ளன. இதைக் காண்போம். ஒரு நாளுக்கு 24 ஓரைகள். இதை 7 கிரஹ தேவதைகளுக்குப் பகிர்ந்தளித்தனர். ஒவ்வொருநாளும் உதயத்தில் முதல் ஓரையை யாருக்கு அளிக்கின்றனரோ அவரே அந்த நாளும் அவன் பெயரால் அழைக்கப்படும். சனி, குரு, செவ்வாய், சுக்ரன், புதன், சந்திரன் என்ற வரிசையில் பகிர்ந்தளிக்கப்படும்.

## வரிசை

கிரஹங்கள் ஒரு முறை 12 ராசிகளையும் சுற்றிவரும் கால அடிப்படையிலேயே இறங்குவரிசையில் இவ் வரிசை கொள்ளப்பட்டுள்ளது.

| | | | |
|---|---|---|---|
| சனி | — | 10759.52 | நாட்கள் |
| குரு | — | 4332.58 | ,, |
| செவ் | — | 686.98 | ,, |
| சூரி | — | 365.26 | ,, |
| சுக்ரன் | — | 224.70 | ,, |
| புதன் | — | 87.97 | ,, |
| சந்திரன் | — | 27.32 | ,, |

பெயர்: முதலில் ஒரு நாளை எடுத்துக்கொள்வோம். அதன் முதல் ஓரையை சனி பகவானுக்கு ஆக்குவோம். அன்று அது சனிக்கிழமை ஆகிறது. (கிழமை என்ற சொல்லுக்கு 'உரிமை' என்று பொருள். சனிக்கிழமை என்றால் சனிக்கிழமைக்கு உரிய நாள் எனப்பொருள்.) முதல் ஓரை சனிக்கு, அடுத்தது குரு அல்லது வியாழன், மூன்றாவது செவ்வாய், அடுத்தது சூரியன், ஐந்தாவது சுக்ரன், ஆறு புதன், ஏழு சந்திரன், மீண்டும் 8வது ஓரை சனிக்குக் கொடுத்து, குரு, செவ்வாய், சூரியன், சுக்ரன், புதன், சந்திரன் இவர்களுக்கும் கொடுக்க 15வது ஓரை மீண்டும் சனிக்குக் கிடைக்கும். 23–வது ஓரை குருவிற்கும் 24–வது ஓரை செவ்வாய்க்கும் கொடுக்க நாள் முடிவுறுகின்றது. அடுத்த நாள்

செவ்வாய்க்கு. அடுத்த நாள் சூரியன் (அதாவது 26-வது ஓராதிபன்) முதல் ஓரையைப் பெறுகிறான். அந்நாள் அவன் பெயரால் அழைக்கப்படுகிறது. அதாவது ஞாயிற்றுக்கிழமை என அழைக்கப்படுகிறது. அன்று 1, 8, 15, 22, ஆகிய நான்கு ஓரைகளை சூரியன் பெறுகிறான். 23-வது ஓரை சூரியனுக்கு அடுத்த சுக்ரனுக்கும் 24-வது புதனுக்கும் கொடுக்க நாள் முடிகிறது. புதனுக்கு அடுத்த சந்திரனின் ஓரையுடன் அடுத்த நாள் ஆரம்பமாகிறது. நாலதும் திங்கட் கிழமை என அழைக்கப்படுகிறது. இங்ஙனமே திங்களன்று 22-வது சந்திரனின் ஓரை 23 மீண்டும் சனி 24 வது வியாழன் பிறகு 25. அதாவது மறுநாள் வியாழனுக்கு அடுத்த செவ்வாய் முதல் ஓரையை பெறுகிறான். இப்படியே மற்ற நாட்களையும் வெள்ளிக்கிழமை முடிய கண்டு கொள்க. வெள்ளிக்கிழமையிலிருந்து கணக்கிட மீண்டும் சனி முதல் வெள்ளி வரையிலுள்ள சுழற்சி கிடைக்கும். இவ்வாறு ஓரை என்ற கால அளவை நிர்ணயித்து ஓராதிபர் வரிசையையும் நிர்ணயித்து ஓராதிபர்களையும் நிர்ணயித்து வார அமைப்பைத் தோற்றுவித்த நம்முன்னோர் களின் அறிவாற்றல் சிந்தித்து இன்புறுவதற்குரியது. பிற நாட்டில் இந்த சாத்திர அடிப்படையில் நாள் வரிசை அமைப்பு காண்டற்கரிது.

## ஸ்ரீ அகிலாண்டேச்வரீ !

நாம் வாழும் இந்த உலகத்தை 'மாயப்ரபஞ்சம்' என்று அத்வைத தத்வம் கூறுகிறது. ஆனாலும், நாம் பிரத்யட்சத்தின் பிடியில் சிக்குண்டு உழலுகிறோம். காணுவதெல்லாம் மாயை என்ற உணர்வு அவ்வப்போது ஏற்படுகிறதே தவிர, அதை ஒப்புக் கொள்ள முடியாமல் மாயை வந்து குறுக்கே நிற்கிறது. இவ்வாறு உணர்வு பிளவுபட்டதும் உலக சிருஷ்டிக்குக் காரணமான கண்ணுக்குப் புலப்படாத அந்த வஸ்துவைக் கருத்தில் வைத்து ஆராய்கிறோம். இந்த ஆராய்ச்சியின் முடிவாக சிருஷ்டிக்குக் காரணமாயிருப்பவளைத் 'தாய்' என விளிக்கிறோம். நம்மைப் பெற்றெடுத்த தாயின் தாயையும்,அவள் தோன்றக் காரணமாயிருந்த குடும்ப மூதாதையர்களையும் ஈன்ற தெய்வத்தாயை 'பராசக்தி' என்றும், 'அந்தப் பராசக்தியே பரம்பொருள்;அவளே ஜகன்மாதா, அகில உலகங்களையும் ஈன்ற தாய்' என்றும் கொண்டாடுகிறோம். அத்தகைய பெருமை வாய்ந்தவளை லலிதா ஸகஸ்ரநாமம் முதலில் வைத்து - ஸ்ரீ மாதா-சக்தி வழிபாட்டை ஆரம்பித்து வைக்கிறது.

சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் முத்தொழிலையும் செய்பவள் பராசக்தி என்று உணர்த்துகிறது. ஸஹஸ்ரநாமத்தின் மூன்று முதல் நாமாக்கள்—ஸ்ரீ மாதா—ஸ்ரீ மஹாராக்ஞீ—ஸ்ரீ மத்ஸிம்ஹாசனேச்வரீ—இம் மூன்று நாமாக்களின் சொரூபமாகத் திகழ்பவள் அகிலாண்டேச்வரீ. ஜம்புகேச்வரம் என்ற திருஆனைக்காவில் அம்பிகை நின்றபடி காட்சி தந்தருளினாலும், ஸர்வோத்க்ருஷ்டமான ஸிம்ஹாஸனத்தில் அமர்ந்திருப்பதாக ஐதிகம். ஏனெனில் இந்தப் பராம்பிகையை அகில உலக அரசி என்று-ஸ்ரீ மஹாராக்ஞீஎன்று - சொல்லப்படுவதால் அரசிக்கு உரிய ஸிம்ஹாஸனம் சூக்ஷ்மமாக இங்குப் பொருந்துகிறது;

—'பராசக்தி படிவம்' என்ற நூலிலிருந்து திரட்டியது.
குமாரி. வி. சௌந்தரநாயகி - சென்னை-15.

## முடிவுரை

பாரத நாட்டு பேராசிரியர்கள் பண்டைய இஸ்லாமிய பல்கலைக் கழகங்கள் அனைத்திலும் கி. பி. 500 கி. பி. 800 வரை வான சாஸ்திரம் போதித்து வந்தனர் என்பது வரலாறு கூறும் உண்மை. இவர்களிடம் கற்றுத்தேர்ந்த அராபியப் பேராசிரியர்களிடமிருந்தே மேலை நாட்டினர் வான சாஸ்திர அறிவு பெற்றனர். முகமதியர்களிடமிருந்து வான நூலறிவு பெற்றோம் என்பது கிறித்தவர் பெருமைக்கு இழுக்காம் எனக் கருதிய கிறித்தவ அதிவாதிகள், இவ்வுண்மையை மறைக்க, கிரேக்கப் பாரம்பர்யக் கற்பனைக் கதையை தோற்றுவித்து, நிலைநாட்ட முயலுகின்றனர். ஹோரா என்ற சொல்லே கிரேக்க என்ற சொற்றறிவு என்றும், நாளை 24 கூறுக்கி, 24 மணி அல்லது ஓரை என்ற காலப் பிரிவு கிரேக்கர்களிடமிருந்து பெறப்பட்டது என்றும் கூறுகிறார்கள். ஹோரா என்ற ஒரு சொல் பண்டைய வடமொழியில் இல்லை என்றும் அடித்துப் பேசுகின்றனர். அந்தோ! இவர்கள் அஹோராத்ர என்ற சொல்லில் 'அ' 'த்ர' என்ற இரண்டு எழுத்துக்களை நீக்கிச் சுருக்கிய சொல் வடிவமே ஹோரா என்பதாம் என்பதை அறிந்திலர். இச்சொல் பகலிரவு கொண்ட நாள் என்றும், ஒரு நாளின் 24-ல் ஒரு கூறு என்றும் பொருள்படும் என்பதை வடமொழி இலக்கியம் கற்றோரும் அறிவர். ஆக இவற்றால் வாரம் என்ற காலப்பிரிவு வேதம் போல் தொன்மையது என்றும், இது ஓரை அடிப்படையில் தோன்றியது என்றும், ஓராதிபராகிய ஏழு கிரகங்களே வாராதிபர்கள் என்றும், சென்ற இடங்களில் இவ்வாராதிபர்கள் அமைப்பு சற்று சிதறியது என்றும், இதன் தொன்மையினையும், இஃதை ஈர்த்தது பாரதம் என்பதையும், மறுப்பார் கொள்கை ஆதாரமற்றது என்பதையும் காட்டி விளக்கினோம்.



தொடர் கட்டுரை

# திருமாலின் திரு அவதாரங்கள்

மாவலியின் மதமொழித்த
வாமனனே! மாளாத ஆணவத்தால்
மேவவரும் கன்னமதம் கபோலமதம்
தன்னோடு பீஜ மதமும்
ஆவகெடும் யானைபோல் குலங்கல்வி
செல்வமெனும் மும்ம தத்தால்
பாவியேன் சாம்போது பரம்பொருளே
கடைக்கண்ணால் பார்த்து அருளே!

திருமாலின் திரு அவதாரங்களாக மச்சம், கூர்மம், வராகம், நரசிம்மம் என்பனவற்றை இதுவரை கண்டோம். மச்சத்திலிருந்து கூர்மம், கூர்மத்திலிருந்து வராகம், வராகத்திலிருந்து நரசிம்மம் எனப்படிப்படியே அவதாரங்கள் வளர்ச்சி பெற்று விளங்கும் நிலை அறிவுக்கு விருந்தாக அமைகிறது. மனிதனும் சிங்கமும் கூடிய நிலையிலிருந்து முழுவதுமாகப் பெரு வளர்ச்சி பெற்ற வடிவமே வாமனவதாரம் பற்றி இக் கட்டுரையில் காண்போம்.

யாசிக்கும் வடிவத்தோடு வருகிறார் திருமால். தன் அன்பனாகிய பிரகலாதனது மரபில் உதித்தவன் மாபலி என்பதால், கடுமையான வடிவம் கொள்ளாமல் எளிமையான வடிவம் கொண்டு கையேந்தி நிற்கிறார் எம்பெருமான்! மாவலியின் ஆணவத்தை அடக்க அவர் வேறு வடிவத்தை எடுத்திருக்கலாம். ஆனால், அது அவரது மாண்புக்கு உகந்ததாக இருக்காது. எனவே தான், அடக்கமாக - அந்தணராக - குறளனாக வடிவெடுத்து வருகிறார். யாசிக்க வருவோர் கூனிக் குறுகித் தானே வருவர்! திருமாலும் வாமனராகவே வருகிறார். அவ்வரலாற்றினை இனிக் காண்போம்.

நாராயணனின் நாமம் நவின்று நலம் பல பெற்றவன் பிரகலாதன். பிரகலாதனுக்கு மைந்தன் ஒருவன் இருந்



தான். அவன் பெயர் விரோசனன் என்பது. விரோசனின் மனைவி தேவி. விரோசனனும் தேவியும் செய்த புண்ணியத்தால் இவர்கட்கு ஆண்மகவு ஒன்று பிறந்தது. அம் மகவுக்குப் பலி என்று பெயர் சூட்டினார்கள்.

முன்பொரு சமயம் எலியொன்று சிவன் கோவிலில் உலவிவந்தது. கோவில் திருவிளக்கு ஒன்றினை அணையவொட்டாமல் அவ்எலி

புலவர். மா. சீதாராமன் M.A., B.Ed,
பெருங்கட்டூர்.

தூண்டிக் கொண்டேயிருந்தது. இதனைக் கண்ட சிவபெருமான் உள்ளங் குளிர்ந்தார். ''எலியே! என் திருக்கோயிலின் திருவிளக்கைத் தூண்டித் திருப்பணி செய்தாய்! எனவே, நீ அடுத்த பிறப்பில் பலி என்னும் திருநாமத்துடன் பிறப்பாய்! மூவுலகையும் ஒரு சேர நீ ஆண்டு வருவாயாக!'' என்று வரங்கொடுத்தார். அந்த எலியே இப்போது பலியாகப் பிறந்துள்ளது. சிவத்தொண்டு புரிந்தார் அடையும் சிறப்புக்கு இதுவே சான்று!

பலிவளர்ந்து அரசாட்சி புரிதற்குரிய பருவத்தையடைந்தான். உலகங்கள் அனைத்தையும் தன்னடிப் படுத்த எண்ணினான். தன் குல குருவாகிய சுக்கிராசாரியரின் துணையுடன் பெருவேள்வி செய்தான். இதன் பலனாகச் சிறந்த தேரும், வில்லும், அம்புகளும் அவனுக்குக் கிடைத்தன. மகாபலத்தையும் பெற்றான். எனவே, மகாபலி என்று பெற்றான். மகாபலி தன் பாட்டனாராகிய பிரகலாதாழ்வார் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி நல்லாசி பெற்றான். வானுலகையும் ஆள வேண்டும் என்ற எண்ணம் மகாபலிக்குத் தோன்றியது, எனவே, தன் படைகளுடன் சென்று வானுலகை வளைத்துக் கொண்டான்.

மகாபலியின் செயல்கண்டு இந்திரனும் தேவர்களும் அஞ்சினர். தம் குல குருவாகிய வியாழ பகவானைச் சரணடைந்தனர். வியாழபகவான் கூறலானார்:

''தேவர்களே! மாவலி தன்குல குருவைப் போற்றி மதித்து வருகிறான். தன் குருவின் துணையால் பெருவேள்வியியற்றி நலம்பல பெற்

றிருக்கிறுன். குருவின் அருளைப் பெற்றவர் எல்லா நலன்களையும் எய்துதல் திண்ணம். நீங்களோ, குருவாகிய என்னை என்றுமே மதித்ததில்லை. எனவே, குருவை அவமதித்து வந்த நீங்கள் அதற்குரிய பயனை அனுபவித்தே தீரவேண்டும். சிலகாலம் நீங்கள் அவுணர்க்கு அஞ்சியே வாழ்தல் வேண்டும், திருமால் திரு அவதாரம் செய்து மாவலியின் ஆற்றலை அடக்குவார். அப்போது உங்கட்கும் அரசாட்சியை வழங்குவார். அதுவரை எங்காவது மறைந்து வாழுங்கள்!''

குருவின் வாசகம் கேட்டுத் தேவர்கள் தப்பிப் பிழைப்பதற்காகத் தங்கள் வடிவத்தை மாற்றிக் கொண்டனர். அவுணர்களின் கண்களில் படாமல் அஞ்சியொளிந்து வாழ்ந்தனர். எதிர்ப்பாரின்மையால், தேவலோக ஆட்சி மாவலிக்கு எளிதாகக் கிட்டிற்று. நூறு அசுவமேத யாகங்கள் புரிந்து தன்னிகரில்லாது ஆட்சி புரிந்து வரலாஞன்.

தேவர்களின் தாய் அதிதி என்பவள், தன் மக்கள், அரசும் உரிமையும் இழந்து அல்லல் படுவதைக் கண்டாள். தன் கணவனுகிய காசிப முனிவரிடம் தன் மக்களின் அவலநிலையை எடுத்துக் கூறினுள். அது கேட்ட காசிபர் திருமாலை வழிபாடு செய்தால் துயரம் நீங்கும் என்று கூறினுர்.

அதிதி திருமாலை வழிபடுவதற்கான விரதத்தை மேற்கொண்டாள். பங்குனி மாதம் வளர்பிறையில் விரதத்தைத் தொடங்கினுள். திருமாலின் திருவுருவத்தைப் பொன்ஞல் செய்தாள். பன்னிரண்டு நாள் பாலுணவே உண்டாள். இறைவனுக்குப் பதினுறு வகை உபசாரங்கள் செய்தாள். அவையாவன: இறைவன் எழுந்தருளத்தவிசளித்தல், கை கழுவ நீர் தருதல், கால் கழுவ நீர் தருதல், முக்குடி நீர் தருதல், நீராட்டல், ஆடைசாத்தல், முப்புரி நூல் தருதல், தேய்வை பூசுதல், மலர் சாத்தல், மஞ்சளரிசி தூவல், நறும்புகை காட்டல், விளக்கிடல், கருப்பூரம் ஏற்றல், அமுதம் ஏந்தல், அடைகாய் தருதல், மந்திர மலரால் அருச்சித்தல் என்பன.

விரத முடிவில் அறுசுவை யுணவை அருமறையோர்கட்கு அன்புடன் வழங்கினுள். விரத முடிவில் அச்சுதன் அதிதிமுன் தோன்றினுர். அதிதி அச்சுதனைப் பலவாறு போற்றித் துதித்தாள். தானே அதிதியின் வயிற்றில் மகனுகப் பிறந்து தேவர்களின் குறைகளைப் போக்குவதாகக் கூறி மாயவன் மறைந்தார்.

புரட்டாசி மாதம் சுக்கிலபட்சம் துவாதசி திதியோடு கூடிய திருவோண நட்சத்திரத்தில் காசிபருக்கும் அதிதிக்கும் நன் மகவாகத் திருமால் திருஅவதாரம் செய்தார். உலகத்துக் கருத்துக்களையெல்லாம் இரண்டே அடிகளாலான திருக்குறள் தன்னுள் அடக்கி நிற்பதைப்போல, உலகங்களையெல்லாம் தன்னுள்ளே வைத்துக்கொண்டிருக்கும் திருமால் குறள் வடிவங்கொண்டார். மிகக் குள்ளமான வடிவத்தோடுகூடியவாமனர் காசியபராலும் அதிதியாலும் கனிவுடன் வளர்க்கப் பெற்ருர். குழந்தைப் பருவத்தில் செய்யப்படும் சிறப்புக்கள் அனைத்தும் வாமனருக்குச் செய்யப்பட்டன. உபநயனம் செய்யப்படும் பருவமும் வந்தது.

தேவகுருவாகிய வியாழ பகவான் வாமனருக்குப் பூணூல் அணிவித்தார். சப்தரிஷிகள் தருப்பையைக் கொடுத்தனர். பிரம்மா கமண்டலம் அளித்தார். தாய் கோவணம் அளித்தாள். அமர்வதற்குரிய மான்

(31-ம் பக்கம் பார்க்க)

**ஸ்ரீதேவி பூதேவி சமேத ஸ்ரீநிவாசபெருமாள் - சிவாவிஷ்ணு ஆலயம். (வேலூருக்கு அருகே உள்ள காட்பாடியில் இக்கோயில்உள்ளது. அண்மையில், உற்சவரான ஸ்ரீநிவாச பெருமாளுக்குத் திருக்கல்யாணமும், கோயிலின் சம்ப்ரோக்ஷணமும் நடைபெற்றது)**



# இந்திய மருத்துவம்

டாக்டர். எஸ். ஜெயராமன்
R.M.P., M.I.H., L.I.M.,
திருப்பதி.

நாம் இந்திய மருத்துவம் பற்றி தெரிந்து கொள்ளும் முன் அதன் பிரிவுகளைப்பற்றி தெரிந்து கொள்ளுவது முக்கியம். இந்திய மருத்துவத்தில் சித்த-ஆயுர்வேத-யூனனி என்ற மூன்று பிரிவுகள் உள்ளன. இம் மூன்று வைத்திய முறைகளையும், ஒட்டு மொத்தமாக சேர்த்து பொதுவாக நாட்டு வைத்தியம் என்று மக்கள் அழைக்கின்றனர்.

பதினெண் சித்தர்களால் வைத்திய சாத்திரத்தை பற்றி பலப்பல நூல்கள் பாடப்பட்டுள்ளன. நோய் தீர்த்து, ஆயுளை விருத்தி செய்வதாக தன்வந்திரி என்ற முனிவரும், மற்றும் அவர் போன்றவர்களாலும் கூறப்பட்ட வைத்திய சாத்திரம் ஆயுள்வேதம் என்றும் (இதுவே மருவி ஆயுர்வேதமென்று) அழைக்கப்படுகிறது. மூலிகைகளாலும் (Gani-Minarals) கனி வகைகளாலும் நோய் தீர்க்கும் முறைகளை தமிழ் முனி அகஸ்தியராலும், தேரையர், போகர், புலிப்பாணி போன்ற சித்தர்களால் கூறப்பட்டதாலும் சித்த வைத்தியம் எனவும் பெயர் பெற்றது. யூனனி என்பது இஸ்லாமியர்களால் பின்பற்றபடும் வைத்திய முறையாகும்.

சுமார் இரண்டாயிரம் காலத்திற்கு முன்பே சித்தர்களால் இந்திய மருத்துவம் கையாளப்பட்டு, உபயோகத்திலிருந்தது. காலம் மாற மாற நாகரீகம் முற்றி, ஆங்கில மருத்துவத்துக்கு மக்களின் மோகம் திரும்பியதால் இடையில் இந்திய மருத்துவத்தின் மதிப்பு குறைந்தது. ஆனால் தற்போது இதன் மதிப்பு உயர ஆரம்பித்து மக்களால் அதிகம் விரும்பப்பட்டு வருகிறது.

சித்தர்களின் சிந்தனை அற்பத்தனமான பொருள்களின்மேல் படிவதில்லை. அவர்கள் என்றும் அழியாத பேரறிவு, பேரின்பம் இவற்றை விழைபவர்கள். உணர்வு வழியில் இலயிக்காமல் அறிவு வழியில் மனதை ஒரு நிலைப் படுத்தி இறைவனையும் உலகையும் காண்பவர்கள். ஆனால் பொருளையும், பொன்னையும், புகழையும், விளம்பரத்தையும் மிகுதியாகப் பெறும் துறவிகளை எப்படி உண்மைச் சித்தர் என்று கூற முடியும்? நான் என்னைப் பற்றி கூறிக் கொள்ள விரும்பினால், நான் சித்த வைத்தியப் பரம்பரையில் வந்தவன், சித்த வைத்தியத்தை அறிந்தவன், தெரிந்தவன், கற்றவன் என்று கூறிக் கொள்ள முடியுமே தவிர, நான் ஒரு சித்தன் – சித்தியில் சிறந்தவன் என்று எப்படி கூறிக் கொள்ள முடியும்? அதைவிட சிறுமை வேறு என்று இருக்க முடியும்.

எந்தச் செயலையும், யாரும் இடைவிடாத முயற்சியால் செய்ய முடியும் என்ற உண்மையில் அசைக்க முடியாத நம்பிக்கை உண்டு.

ஓடி ஓடிப் பயில்பவன் காலப் போக்கில் பெரும் ஓட்டப் பந்தய வீரனாகிறான்.

வரைந்து வரைந்து பழகியவன் காலப் போக்கில் பெரும் ஓவியனாகப் பெயர் பெறுகிறான்.

பேசிப் பேசிப் பழகியவன் காலப் போக்கில் பெரும் பேச்சாளனாக மாறி விடுகிறான்.

எல்லாக் கலைகளும் – செயல்களும் பயிற்சியால் செம்மையாக கை வருகிறது என்பது திண்ணம்.

ஆதலின் நான் இனி கூறப்போகும் விஷயங்களை மிகவும் கவனத்துடனும், பொறுமையுடனும், விடாமலும் படித்து, அதன்படி நீங்களே செய்து வந்தால், நீங்களும் ஒரு சிறந்த இந்திய மருத்துவராகலாம்.

விரிந்து பரந்த பூமியினிடத்தே முளைத்த மூலிகை ஔஷதாதிகள் நான்கு வகைப்படும். அவைகளாவன – மரம், செடி, கொடி, புல் என்பவைகளாகும். இதில் ஒவ்வொரு வர்க்கங்களின் பிரிவுற்ற பாகங்களை– பேதங்களை கூறவேண்டுமானால் அவை அளவிற்கடங்கா! அவைகளிற் சிலது வேர் முதல் வித்துக்கள் வரை என எண்வகைப் பொருட்களாக இருக்கின்றன எனலாம். அந்த எண் வகைப் பொருட்கள்–வேர், கட்டை, பட்டை, இலை, பூ, பழம், வித்து, ரசம் என்பனவாகும். இவைகள் ஒவ்வொன்றும் – கசப்பு, இனிப்பு, கார்ப்பு, புளிப்பு, துவர்ப்பு, உப்பு ஆகிய ஆறுவகை ருசிகளைப் பெற்றிருக்கும். மேலும் இவ்வுலகில் கோடானு கோடி மூலிகைகள் இருக்கலாம். அவைகள் அனைத்தையும் அறிந்தவர் தற்காலத்தில் எவரும் இல்லை எனலாம். ஆயினும் சாதாரணமாக நம் நாட்டில் கிராமங்களில், வயல் வெளிகளில், மலைகளில், கடைகளில் கிடைக்கும் சில முக்கிய மூலிகைகளைப் பற்றி தெரிந்து, அவைகளால், அவைகளின் சேர்க்கையால் செய்யப்படும் மருந்துகளையும், அம்மருந்துகளால் குணமாகும் வியாதிகளைப் பற்றியும் தெரிந்து கொள்ளுவோம்.

மூலிகைகளைப் பற்றி தெரிந்து கொள்ளுமுன் நீர் வகைகளைப் பற்றியும், பால், தயிர், நெய், இவைகளைப் பற்றியும் தெரிந்து கொள்ளுவது நல்லது என நினைக்கிறேன். ஆகையால் அவைகளைப் பற்றி முக்கியமான சில வகைகளைப் பற்றி முதலில் கூறிவிடுகிறேன்.

**நீரின் வகைகள்**

தண்ணீரின் குணங்களெல்லாம் மண்ணின் குணமேயன்றி வேறில்லை.

அதன்படி ஆறு, குளம், ஏரி, மடு, கிணறு, சுனை என்னும் ஆறு வகை இடங்களில் உள்ள நீரை அவ்வவ் இடப் பெயர் பெற்ற நீரெனச் சொல்வர். பனி நீரை சூரியோதய காலத்தில் குடித்து வந்தால், சொரி, சிரங்கு, கிரந்தி, குஷ்டம், தாசம், காசம், கிராணி, திரிதோஷம் இவைகள் நீங்கும்.

ஆற்று நீரை அருந்தினுல் வாதம், கபதோஷம், தாகம், பித்தம் மந்தமான சிற்சில ரோகம் ஆகியவை நீங்கும். மேலும் சுக்கில விருத்தியை உண்டாக்கும்.

கங்கை நதியின் நீரை அருந்திஞல் உட்சூடு, க்ஷயம், தாகம், தேக யெரிச்சல் இவை நீங்கும்.

வைகையாற்று நீரை பருகுவதனுல் வாத மேகம், குஷ்டம், கரப்பான் தாது நஷ்டம் இவை நீங்கும்.

காவேரி நதியின் நீரினுல் உப்பிசம், இருமல், கபஞ்கட்டு, ஜலதோஷம், நா வரட்சி இவை நீங்கி தேகத்தில் அழகுண்டாகும்.

தாம்பிர பரணியாற்றின் நீரினுல் கண் புகைச்சல், உட்சுரம், பித்த தோஷம், ஷயம், எலும்புருக்கி நோய், கை, கால் எரிவு இவை விலகும். குளத்து நீரை குடிப்பதனுல் வாத ரோகம் விருத்தியாவதுமன்றி சீதளமும் உண்டாகும்.

அதிக குளிர்ச்சியுள்ள குளத்து நீரால் உடல் கெடும். விக்கல், வாந்தி, குளிர் ஜுரம் காசம், வயிற்று வலி உண்டாகும். அதில் சரீரம் ஊறுமானுல் எல்லாவித நோயும் வர வாய்ப்புண்டு.

தாமரைக் குளத்து நீரைக் குடிப்பதனுல் வாதம், பித்தம், பழய உட்சுரம், அதிதாகம் இவைகள் அதிகமாகும்.

அல்லிக்குளத்து நீரால் அஜீரண பேதி, சொரி, புண், தாது நஷ்டம், ஆகியவை உண்டாகும்.

ஓடையின் நீர் துவர்ப்பும் இனிமையும் உள்ளதுடன் தாகமும், புஜ பலமும் உண்டாகும்.

ஏரியின் நீர் துவர்ப்பு சுவையுடன் வாயுவையும் ஏற்படுத்தும். கற்சுனை நீரால் வாத பித்த தோஷமுண்டாகும், அதையொரு நாள் வைத்திருந்து மறுநாள் குடிக்க குளிர்ச்சி நீங்கி உஷ்ணமுண்டாகும்.

குற்றமில்லாத கிணற்று நீரினுல் அதிதாகம், உஷ்ணம், சூலை, சரீரத்தின் உட்கடுப்பு, இடுப்பு குடைச்சல், மயக்கம், பித்த தோஷம், சுவாசம் இவை நீங்கும்.

ஊற்று நீரினுல் மிகுந்த பித்தமும் உடனே சாந்தியாகும். மலையருவி நீரினுல் பிரமேகம்,ரத்தபித்தம் விலகும். சிலேஷ்மத்தையும், தேக பலத்தையும் உண்டாக்கும். நெல் வயல் நீரினுல் விகார தாகம், மூர்ச்சை, சுர வேகம் ஆகியவை விலகி, சப்த தாதுக்களும் குளிர்ச்சியடைந்து தேகம் பலக்கும்.

சூரிய, சந்திர கிரணங்கள், காற்று இவைகள் படாமல், சேறு கலந்த ருசியற்ற நீரால் அல்லது நீரை குடிப்பதாலும், குளிப்பதாலும், சகல ரோகங்களும் வாய்ப்புண்டு.

மிக மதுரமான நீராகாரத் தெளி நீர் வாத, பித்த, சிலேத்தும வரட்சிகளையும், தாகத்தையும் தீர்க்கும். சுக்கில விருத்தி செய்து, அழகையும் உண்டாக்கும்.

உப்புத் தன்மையுடைய நீரினுல் ஓடி குத்துகின்ற வாய்வும், பித்த மந்த கரிப்பும், வாயில் துர் வாசனையுடைய நீர் ஊறுதலும் ஏற்படும். ஆனுல் குடல் வாதம் விலகும்.

கடல் நீரால் குஷ்டம், ரத்த குன்மம், வாத குன்மம், பெறு வயிறு நீங்கும்.

இளநீரை முறையாகக் குடித்து வந்தால், வாதம், பித்ததோஷம், கபாதிக்கம், பித்தம் இவை நீங்கும். மனத்தெளிவு, நேத்திரத்தில் குளிர்ச்சி, மூத்திரப் பெருக்கம், மலப் போக்கு இவைகள் உண்டாகும்.

சிவந்த இளநீரினுல் பித்த அதி கரிப்பால் ஏற்படும் தாகம், வழி நடையால் ஏற்பட்ட களைப்பு, அசதி இவைகள் நீங்கும்.

பச்சை நிற இளநீரால், சீழ் பிரமேகம், யானைச் சொரி, கண்ணேய் இவைகள் குறையும்.

(28-ம் பக்கம் பார்க்க)

## அருள் வாக்கு

பரமேசுவர மூர்த்தி ஆலமரத்தின் அடியில் தட்சிணுமூர்த்தியாக அசையாமல் இருந்தார். அவருக்குத் தான் 'சம்பு' என்ற பெயர். 'சம்பு' என்ருல் 'நித்யசுகம்' என்று பெயர். நித்யசுகம் உற்பத்தியாகும் இடமே சம்பு. ஆனந்த ஊற்றே சம்பு.

இந்த ஆனந்த ஊற்று இருந்த இடத்திலேயே, கண் பார்க்காமல், வாய் அசையாமல், உடம்பு நலுங்காமல் இருக்கிருர். ஒரே நிஷ்டையாகச் சமாதி நிலையில் மௌனமாக இருக்கிருர். ஸனகாதி யோகிகள் அவரை அந்த நிலையிலேயே பூஜித்துப் பரம்பொருளை அடைந்தார்கள். அந்த ஆனந்த ஊற்றை அருகில் இருந்து தரிசித்து, அந்த அளவிலாத மகிழ்ச்சியைத் தாங்களும் அடைந்தார்கள். மௌனம் தான் இவர்கள் பெற்ற மஹா உபதேசம்.

—காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

# கீதை காட்டும் நல்வழி

## பக்தி யோகம்

**அத்தியாயம்-12**

பகுதி — 8

**ஆ**த்ம சாதகன் எப்படிப் படிப் படியாகப் பக்குவம் அடைகிறான் என் பதைப் பகவான் கீழ்க்காணும் சுலோ கத்தில் விளக்குகிறார் :

ச்ரேயோ ஹி ஞானமப்யாஸாத்
ஞானாத்த்யானம் விசிஷ்யதே |
த்யானாத் கர்மபலத்யாகஸ்
த்யாகாச் சாந்திரனந்தரம் || 12 ||

'அப்பியாஸத்தை விட ஞானம் சிறந்தது. ஞானத்தை விட தியானம் மேலானது. தியானத்தைக் காட்டி லும் கர்ம பலத்யாகம் சிறந்தது. தியாகத்தினின்று சாந்தி விரைவில் வருகிறது'

நம்மில் பலரும் சமய சம்பந்தமான பல சடங்குகளை அன்றாடம் செய்து வருகிறோம். ஆலய வழிபாட்டில் விநாயகர் முன் நின்று தோப்புக் கரணம் போடுதல், தலையில் குட்டிக் கொள்ளுதல், ஆலயத்தை வலம் வந்து ஸர்வதிக்கிலும் நமஸ்காரம் செய்தல் போன்ற பல செயல்களை அவற்றின் தத்துவம் இன்னதென்ன அறியாது பிறர் செய்வதைப் பார்த்து அப்படியே காப்பி அடிக்கி றோம். நாம் செய்வதைப் பார்த்துக் குழந்தைகளும் அப்படியே செய்கின் றன. சில அறிவாளிக் குழந்தைகள் அவை குறித்து ஏன் எப்படி என்று நம்மிடம் கேள்வி கேட்டால் நமக்கு அதற்கான விளக்கம் தெரியாத காரணத்தால் அவற்றை அதட்டுப் போட்டு அடக்கிவிடுகிறோம். இப்படி யாக வெறும் பழக்க வழக்கங்கள் தொடர்ந்து செய்யப்பட்டு வருகின் றன.

இந்த அப்பியாசத்தைக் காட்டி லும் இறைவன் எங்கும் நிறைந்த பரம்பொருள் என்ற வாசா ஞானம் மேலானது. 'சுட்ட சட்டி சட்டுவம் கறிச்சுவை அறியுமோ?' என்று சொல்லுவர். வருடக் கணக்காக வெறும் சடங்குகளை அவற்றின் தத்து வம் அறியாது இயந்திரகதியில் செய்வ தைக் காட்டிலும் உள்ளர்த்தத்தைத் தெரிந்து கொள்ளுதல் சிறந்ததாகும்.

திரு. டி. கே. நாராயணன், M.Sc.
ஆசிரியர் ''சமய ஜோதி'' மதுரை.

குருதேவர் ஸ்ரீசுவாமி சிவானந்தர் சிறந்த அத்வைதி எனினும் அவர் மிகச் சிறந்த, பகதராகவும் விளங்கி னார். நாம் எப்படியோ பூஜை செய் கிறோம், இல்லையா! ஒரு முறை சிவராத்திரியன்று அவர் சிவானந்தா சிரம் விசுவநாதர் ஆலயத்தில் செய்த பூஜை அற்புதமானது. குருதேவரின் சிறந்தபக்தர் ஸ்ரீசுவாமி வெங்கடே சானந்தர் தாம் அன்று கண்ட காட்சியை மிக அருமையாக விளக்கு கிறார்.



"In the temple, there was a little Nandi, then the Siva Lingam, the Krishna statue. Before one offers a flower or a bel leaf on the Siva Lingam, tradition is to offer also a bel leaf on the Nandi, taking the Nandi's permission. If Swamiji offered a flower or a leaf it was very gently placed on the Nandi and very gently placed on the Siva Lingam. I have never seen him throw a flower. If you think it is a stone, it is a stone: if you think it is divine it is divine: it depends entirely upon your bhav.

On Sivaratri night we were all sitting around the Siva Lingam, repeating

some mantras, doing abhishekam and archana and so on. At the end of each periodic workship – every three hours – Swamiji came and somebody gave him some bel leaves and he went on offering the bel leaves first on the Nandi, then on the Siva Lingam. We were busy doing that and he started worshipping all the Swamis sitting around. This was not done mechanically but with the same feeling, the idea that God is not only there, but He is everywhere. I have never seen him treat anything as inanimate, insentient."

விக்கிரகத்தில் வழிபடும் இறைவன் அனைத்துயிரிலும் இலங்குகிறார் என்பதை '' See God in all '' என்ற அவரது போதனை விளக்குகிறது. அதை அவரே எவ்விதம் தமது நடைமுறை வாழ்வில் கடைப்பிடித்தார் என்பதை மேற்காணும் வாக்கியங்கள் விளக்குகின்றன.

வாசா ஞானத்தைக் காட்டிலும் தான் காணும் அனைத்தும் இறைமயமே என்று தியானிப்பது மேலானது. அப்படித் தியானித்து அனைத்தும் தனக்குப் பயன்பட வேண்டும் என்று கருதுவது தவறாகும். எனவே தான் வாழ்ந்திருப்பது தனக்காக அல்ல, இறைவனுக்காக, இறைவன் படைத்த உயிர்களுக்காக எனக்கருதி தனது செயலின் பலன் முழுவதையும் அவனுக்கு அர்ப்பணம் செய்யவேண்டும். கர்ம பலன் முழுவதையும் இறைவனுக்குத் தியாகம் செய்துவிடின் மனத்தினில் விருப்பு வெறுப்பு எதுவும் இருக்க வழியில்லை. அத்தகைய மனத்தில் அமைதி குடி கொள்ளுகிறது. தனக்கென வாழ்பவன் அமைதியற்று இருப்பான். இறைவனுக்காக வாழ்பவன் அமைதியே குடிகொண்டிருப்பான். அவனது வாழ்வில் இன்பமே எந்நாளும் துன்பம் கிடையாது. மகான்கள் அத்தகைய வாழ்வு வாழ்ந்தார்கள்.

எத்தகையவன் கடவுளுக்கு உகந்த பக்தனாகிறான் என்ற கேள்விக்கு அடுத்த சுலோகத்தில் பதில் வருகிறது.

அத்வேஷ்டா ஸர்வபூதானாம்
மைத்ர: கருண ஏவ ச |
நிர்மமோ நிரஹங்காரஃ
ஸம துஃகஸுகஃ க்ஷமீ || 13 ||

ஸந்துஷ்டஃ ஸததம் யோகீ
யதாத்மா த்ருடநிஸ்சயஃ
மய்யர்பிதமனோபுத்திர் யோ
மத்பக்த: ஸ மே ப்ரிய: || 14 ||

(27-ம் பக்கம் பார்க்க)

## ஸாளக்ராம லக்ஷணங்கள்

மனிதன் சாஸ்த்திரங்களின் துணைக்கொண்டு விக்ரஹங்களை வடித்து அதிலே இறைவனைக் கண்டு இன்புறுகிறான். சில விக்ரஹகங்கள் தானாகவே தோன்றி விடுகின்றன. இவைகளை ''ஸ்வயம்பு'' என்கிறோம்.

ஆனால் நேபாளத்திலுள்ள "கண்டகி" நதியில், உருக்கி வார்த்தாற்போல் வழவழ வென்று உள்ளே பலவித சக்கரங்களுடன் காணப்படும் சிறியவையும் பெரியவையுமான கற்கள் ''ஸாளக்ராமங்கள்'' எனப்படும்.

இவை மிகுந்த தெய்வத்தன்மை பொருந்திய அனுக்ரஹ மூர்த்திகள். இவைகளை முறைப்படி அபிஷேக, ஆராதனை செய்பவர்கள் சிறந்து விளங்குவது கண்கூடு.

ஒவ்வொரு ஸாளக்ராமமும் ஒவ்வொரு மூர்த்தியைக் குறிக்கும். இவைகளின் விவரம் பின்வருமாறு:

வாஸுதேவன்: கறுப்பாகவும் மேலும் கீழும் இரு சக்கரங்கள் உள்ளவை.

ஸங்கர்ஷணன்: இதேபோல் சிவப்பு நிறமுள்ளவை.

ப்ரத்யும்நன்: சிறிய சக்கரங்களும் பல த்வாரங்களுள்ளவையும், சிறிது நீண்டு கறுப்பு வர்ணமுள்ளவை.

அநிருத்தன்; வர்த்துளமாகவும் மஞ்சள் வர்ணமாகவும் தாமரை மலர்போன்று இரண்டு மூன்று கோடுகள் உள்ளவை.

நாராயணன்: கறுப்பாகவும், உயரம் மற்றும் தீர்க்கமான துவாரங்களுடன் கூடியவை.

பரமேஷ்டி: தாமரை போன்ற சக்கரங்கள் கொண்டு, புள்ளிகளுடன் விளங்கிப் பின்பக்கம் துவாரமுள்ளவை.

விஷ்ணு: பெரிய சக்கரத்துடன் இடையில் கதாயுதம் போன்ற கோடுள்ளதும் கறுப்பாகவும் உள்ளது.

நரஸிம்ஹம்: பெரிய சக்கரம், ஐந்து புள்ளிகளுடன் கபில வர்ணமுள்ளவை.

ஹயக்ரீவர்: கருப்பு வர்ணம், அங்குசரேகை, புள்ளியுடன் கூடியது.

ஸுதர்சனம்: ஒரு சக்கரம் கொண்டது.

| | | | |
|---|---|---|---|
| லக்ஷ்மீ நாராயணன்: | இரண்டு | சக்கரங்கள் | உள்ளது. |
| திரிவிக்ரமன், அச்யுதன்: | மூன்று | ,, | ,, |
| ஜநார்த்தனன்: | நான்கு | ,, | ,, |
| வாஸுதேவன்: | ஐந்து | ,, | ,, |
| பிரத்யும்நன்: | ஆறு | ,, | ,, |
| ஸங்கர்ஷணன்: | ஏழு | ,, | ,, |
| புருஷோத்தமன்: | எட்டு | ,, | ,, |
| நவ வ்யூக மூர்த்தி: | ஒன்பது | ,, | ,, |
| தசாவதாரம்: | பத்து | ,, | ,, |
| அநிருத்தன்: | பதினொன்று | ,, | ,, |
| துவாதசாத்மா அல்லது அநந்தன் | பன்னிரண்டு | ,, | ,, |

பதினெண்புராணத்தில் ஒன்றான ஆக்னேய புராணத்திலிருந்து தொகுத்தது: ''பாலாதாஸன்'' சூர்யனார் கோயில்.

சிறுவர் சோலை

# இராமானுஜர்

திரு. இரா. இரகுபதி - செங்கற்பட்டு.



பல நூறு ஆண்டுகளுக்கு முன் உயர்வு தாழ்வு எனும் சாதி வேற்றுமைகள் நம் சமுதாயத்தில் வேரோடிப் போயிருந்தன.

அது சமுதாய நிலைகளில் மட்டும் அல்லாமல் இறைவனை வணங்கச் செல்லும் கோவில்களிலும் இருந்தது. தாழ்த்தப்பட்ட மக்கள் இறைவனை வணங்குவதிலும், கோயிலுக்கு உள்ளே செல்வதிலும் கூட அவர்கள் அனுமதிக்கப்பட வில்லை.

இந்த நிலையில் ஓர் பெரியார் 'இறைவனை வணங்குவதில் ஏற்றத் தாழ்வில்லை' என்று உயர்ந்த கருத்தை எண்ணிச் செயல்பட்டார். தாழ்த்தப்பட்டவர்களின் தோளோடு தோள் நின்றார். மைசூர் மாநிலத்தில் உள்ள ஒரு கோயிலில் இறைவனை வணங்க தாழ்த்தப்பட்டவர்களை அனுமதித்தார்.

இவ்வாறு அனுமதித்த போதும், இவர்களோடு பழகிய போதும் பெரும் எதிர்ப்புக்கிளம்பியது. இருப்பினும் அவர் "இறைவனைத் தொழும் அடியார்களிடத்தில் யார் உயர்ந்தவர்? யார் தாழ்ந்தவர்? என்ற வேறுபாடு கிடையாது. வேறுபாடு பாராட்டுபவன் உண்மையான வைணவன் இல்லை" என்று கூறினார்.

இது மட்டுமின்றி திருவரங்கத்தில் புறப்பகுதியில் அரிசன வகுப்பைச் சர்ந்த ஒருவர் ஆழ்வாரின் பாசுரங்களை இனிமையாகப் பாடி மகிழ்ந்து வந்தார். ஒரு நாள் இப்பெரியார் ஆற்றில் நீராடி விட்டு வரும் போது தம் சீடர்களை முன்னே போகச் சொல்லி விட்டு - அந்த அரிசன அடியாரின் குடிசைக்குச் சென்று, அவரைப் பாடச் சொல்லி மூன்று மணிநேரம் அளவளாவி மகிழ்ந்து வந்தாராம்.

இத்தகைய சமூகச் சிந்தனையாளர் யார் தெரியுமா? அவர்தான், அவர் வாழ்ந்த காலத்தில் 'வைணவத்தின் எதிர்காலம்' என்று கருதப்பட்ட இராமானுஜர்.

"யாருக்கு அன்பு செலுத்தத் தெரிகின்றதோ அவர்தான் உண்மையான பக்திமான்" என்று எளிமையாகக் கூறி வைணவத்தின் தத்துவமாகவே வாழ்ந்து காட்டிய பெரியார் இராமனுஜர்.

இவர் செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள ஸ்ரீபெரும்புதூரில் பிறந்தவர். இவருடைய பெற்றோர்கள் கேசவர், காந்திமதி என்பவர்கள். இவர்களுக்குப் பல ஆண்டுகளாக குழந்தை இல்லாமல் இருந்தது. இவர்கள் கி. பி. 1017-ல் இராமானுஜரைப் பெற்றெடுத்தனர்.

காந்திமதியின் சகோதரர் திருமலை நம்பி வைணவப் பெரியாரான ஆளவந்தாரின் சீடர்களில் ஒருவர். திருப்பதியிலிருந்த அவருக்கு செய்தி எட்டியது. உடனே குழந்தையை காண்பதற்காக வந்தார். குழந்தையின் முகத்தில் ஒளி வீசியது. இராமனுடைய தம்பி இலக்குவனின் அடையாளங்களும், நலன்களும் குழந்தையின் உடலில் தெரிந்தமையால் 'இராமனுஜன்' என்று பெயரிட்டார்.

ஸ்ரீபெரும்புதூரில் வாழ்ந்த வைணவப் பெரியார்கள் அனைவரும் குழந்தைக்கு வாழ்த்துக்கள் கூறினர். அவர்களில் திருக்கச்சி நம்பியும் ஒருவர்.

இராமனுஜர் கல்வியிலே குருவுக்கு மிஞ்சிய சீடனாகத் திகழ்ந்தார். காஞ்சியிலே யாதவப் பிரகாசர் என்ற சிறந்த ஆசிரியரிடம் 'அத்வைதப்' பாடம் கற்று வந்தார். இராமானுஜரும், இராமனுஜரின் தாயின்உடன் பிறப்பான ஸ்ரீதேவியின் மகன் கோவிந்தரும்அவ்ஆசிரியரிடம்பாடம் கற்று வந்தனர்.

இதில் சிறந்த தலைமாணக்கராகத் திகழ்ந்தவர் இராமனுஜர். அப்போது

வாழ்ந்த வைணவப் பெரியவரான ஆளவந்தார் இராமனுஜரைக் கண்டவுடன் வைணவத்தின் எதிர்காலத்தை 'ஒளிமயமாக்கும் சான்றோர்' எனக் கருதினார்.

எனவே திருவரங்கத்தில் வாழ்ந்த பெரியவரான ஆளவந்தார் தம் சீடரான பெரியநம்பியை இராமனுஜரை திருவரங்கத்துக்கு அழைத்துவர அனுப்பினார். இராமானுஜர் அவருடன் திருவரங்கம் சென்றார்.

அங்கு திருகச்சி நம்பியிடம் பல உண்மைகளை கற்று அறிந்தார். இராமானுஜருக்குப் பதினாறு வயதில் திருமணம் நடந்தது. அவருடைய மனைவியின் பெயர் தஞ்சம்மா.

இராமானுஜரின் அற்புத சிந்தனைகளாலும், கூர்த்த அறிவாலும், இவரிடம் பெரிதும் வேறுபாடு கொண்டிருந்த இவருடைய ஆசிரியரே இராமானுஜரை நாடி வந்து சீடராக மாறினார்.

பெரியநம்பி 'திவ்விய மந்திரத்தை' அறிந்துகொள்ள திருக்கோஷ்டியூர் செல்லும்படிக் கூறினார். ஆனால் நம்பி இராமானுஜரின் ஆவலை தெரிந்துகொள்ளபிறகு வரும்படியும், உரையாடாதும் இருந்தார்,

இராமானுஜர் பதினெட்டு தடவைகள் அவரிடம் சென்றார். நம்பி இராமானுஜரின் உறுதியைக் கண்டு மகிழ்ந்து 'தத்துவ இரகசியத்தை', வேறு யாருக்கும் சொல்லக் கூடாது என்று கூறிக் கூறினார்.

ஆனால் இராமானுஜர் திருக்கோஷ்டியூர் கோவில் கோபுரத்தில் மேலே ஏறி அனைவரையும் அறைகூவி அழைத்து, நம்பியிடம் கற்ற தத்துவத்தைக் கூறி பறைச் சாற்றினார். இதனால் இவர் இறைவழி காணும் முறைக்கு 'விசிஷ்டாத்வைதம்' என்ற பெயர் ஏற்பட்டது. இராமானுஜரை நாடி பல சீடர்கள் வந்துசேர்ந்தனர்.

வடநாட்டில் வெற்றிக் கொடி நாட்டிவிட்டுத் தென்னகம் திரும்பிய அத்வைத அறிஞர் யக்ஞமூர்த்தி என்பார், இராமானுஜரின் புகழைக் கேட்டு அவரை வாதத்திற்கு அழைத்தார்.

வாதம் திருவரங்கம் பெரிய கோயிலில் பதினெட்டு நாட்கள் நடந்தது. இறுதியில் வடநாட்டில் வாகைசூடிய தத்துவ வீரர் இறுதியில் தோல்வியை ஒப்புக்கொண்டு இராமானுஜரின் சீடராக மாறினார்.

இராமானுஜர் தம் இணையில்லா சிந்தனைகளை ஒன்றுதிரட்டி 'கத்யத்ரயம், நித்யம், கீதாபாஷ்யம்' என்ற என்ற மூன்று நூல்களை இயற்றினார். இராமானுஜர் வைணவத்தின் அடிப்படைத் தத்துவமான பக்தியைக் கொண்டு, ஆழ்வார் பாடல்களில் திளைத்த வைணவ மதத்தின் வளர்ச்சிக்குப் பாடுபட்ட சிந்தனையாளர்.

இறைவழிபாட்டில் சாதிவேற்றுமைகளைக் களைந்தவர். சமயம், சமூகம் ஆகிய இருதுறைகளிலும் பாடுபட்ட சமய, சமூக சீர்த்திருத்தச் சிந்தனையாளர் நம் இராமானுஜர்.



## ஸ்ரீ பத்மாவதி அம்மையார் கோயில்

### திருச்சானூர்

**தினசரி நிகழ்ச்சி நிரல் [9-4-81 முதல் 11-4-81 வரை]**

| | | |
|---|---|---|
| மாலை | 4-00 முதல் 5-30 வரை | – சிறப்பு திருமஞ்சனம் |
| ,, | 5-00 முதல் 6-00 வரை | – அலங்காரம் |
| ,, | 6-00 முதல் 7-00 வரை | – வேதபாராயணம் |
| ,, | 7-00 முதல் 10-00 வரை (இரவு) | – ஊஞ்சல் சேவை, சச்சேரி நிகழ்ச்சிகள். |
| ,, | 10-00 இரவு | – கோயிலுக்கு அம்மையாரின் திருவீதிவலம். |

**சிறப்பு நிகழ்ச்சி**

10-4-81 வெள்ளித்தேர் – காலை 7-00 மணிக்கு

தினந்தோறும் இசைநிகழ்ச்சிகள் (இரவு 7-00 முதல் 10-வரை)

| | | |
|---|---|---|
| 9-4-81 | குமாரி. ரத்னு சுப்ரியா ராம்மோஹன் (அன்னமாச்சார்யா கீர்த்தனைகள்) | – பரதநாட்டியம் |
| 10-4-81 | பேராசிரியர் விஸ்வேஸ்வரன் மற்றும் விதுஷி உஷா விஸ்வேஸ்வரன் | – வீணை நிகழ்ச்சி (இருவர் இசை) |
| | குமாரி. ஆர். வி. வீணு & ஆர். வி. வித்யா | – வாய்ப்பாட்டு |
| 11-4-81 | குமாரி. ஷோபா (அன்னமாச்சார்யா கீர்த்தனைகள்) | – கூச்சுபூடி |

# அனுமன்

வித்வான். எம். நாராயணவேலு பிள்ளை
காஞ்சிபுரம்

அனுமன் இராமபக்தன்; இராமாயணம் படிக்கிற இடங்களில் எல்லாம் அனுமன் அங்கிருந்து கேட்கின்ருன் என்பது நூற்கொள்கை. அவனுடைய சிறப்பு அளவிடற்கரியது. அனுமனை வணங்குகிறவர்கள் புத்தி, பலம், புகழ், உறுதிப்பாடு, அஞ்சா நெஞ்சம். ஆரோக்கியம். விழிப்பு, வாக்குவன்மை ஆகியவற்றைப் பெறுவார்கள்.

இக்குணங்கள் பெரும்பாலும் ஒரே இடத்தில் அமைவதில்லை. அறிவாளிக்கு ஆரோக்கியம் இராது, பலசாலி மண்டுவாக இருப்பான்! சிலருக்குக் கற்றதை எடுத்துச் சொல்லும் ஆற்றல் இராது. ஆனல் அனுமனை வழிபடுகிறவர்கள் இவ்வரிய பேறுகளை ஒருங்கே பெறுகின்றனர்.

## எளிமை ஏழ்மை அன்று

இரண்டு மீட்டர் துண்டு
இடையில் கட்டிக் கொண்டு
இன்று வாழ்ந்த காந்தி
ஏழை அல்ல பாப்பா!

ஊரு ஊராய்ச் சென்று
உணவுப் பிச்சை கொண்டு
பாரில் வாழ்ந்த புத்தன்
பரம ஏழை இல்லை!

வண்ணம் ஒன்றும் இன்றி
வாழும் முல்லைப் பூவும்
எண்ணி எண்ணிப் பார்த்தால்
ஏழை அல்ல பாப்பா!

எளிய வாழ்வு இன்று
ஏழை வாழ்வு அன்று
இனிய வாழ்வு என்று
என்றும் வாழ்வாய் நன்று!

திரு. பொன். சௌரிராஜன்-திருப்பதி.

அனுமன் தேக பலம், புத்தி பலம் போலவே பணிவு, பக்தி இவற்றிலும் முதன்மையாக நிற்கிருன். மகா சக்திமானுக இருந்தும் அவையனைத்தும் இராமன் அளித்த கருணை என்ற அடக்கத்தோடு தனக்கு ஒருபதவியும் கேளாமல் இராமபக்தனுகவே இருந்தான். அனுமன் இராமபிரானுடைய பரமபக்தனுக இருந்து கொண்டே பரம ஞானியாகவும் இருந்தான்.

குருட்சேத்திர பூமியில் அர்ச்சுனனின் தேர்க்கொடியில் இருந்து கொண்டு கீதோபதேசத்தை நேரில் கேட்டவன் அவன். ஒன்பது வியாகரணமும் தெரிந்த 'நவ வியாகரண வேத்தா' என்று இராமச்சந்திரனே புகழ்கின்ற கல்விமான். என்ருலும் சக்திப் பிரவாகம், புத்திப் பிரகாசம் ஆகியவற்றைத் தன்னகத்தே கொண்டு பக்தியிலேயே பரமானந்தம் அனுபவிப்பவன்.

பக்தன் என்பதால் உலக விவகாரத்தில் ஈடுபடாதவன் அல்லன். மகா வீரத்தோடு போரிட்டு வெற்றி கண்டவன். ஞானம், பலம், பக்தி, வீரம், கீர்த்தி, சேவை, பணிவு இவை யாவற்றிலும் உயர்ந்த நிலையில் உள்ளவன்.

இவை யனைத்திற்கும் மேலாக அவன் ஒரு பிரமசாரி. காமம் என்ற நினைப்பே வராதவன். தனக்கென்று எதையும் நினைக்காமல் இராம சேவையிலேயே நிறைகுணம் பெற்றவன். நம்நாட்டில் அவனை அனுமன் என்றும், கர்நாடகத்தில் அனுமந்தையா என்றும் ஆந்திராவில் ஆஞ்சநேயலு என்றும் மகாராஷ்டிரத்தில் மாருதி என்றும் கொண்டாடுகிருர்கள். வடநாட்டில் மகாவீர் என்று போற்றுவர். கம்பநாட்டாழ்வார் இவனைச் சொல்லின் செல்வன் என்று பாராட்டுவார். சகல கலா சம்பன்னன், சாதுர்யமாக பேசவல்லவன்; இராமனே கண்டு வியக்கின்ருன்.

அனுமன் ஒப்புயர்வற்றவன், அவனை நினைத்த மாத்திரத்தில் தைரியம் வரும். பயம் பறந்தோடும், புத்தி பக்தி, ஞானம் இவைகள் சித்திக்கும். காமம் நசிந்துவிடும், பணிவும் இறைவழிபாடும் தோன்றும். அனை வருக்கும் தொண்டு செய்வோம். நல்லது விளையும்.

அடக்கமாக இருக்கிற பண்பு இப்போது மிகவும் தேவைப்படுகிறது. என்ன வந்தாலும் மனநிம்மதியில்லை, புதுப்புது ஆடம்பரங்களை நாடிச் செல்கிருேம். இறைவனை நினைக்க நேரமில்லை. ஆகையால் இறைவனது அருள் தள்ளிப் போகிறது. மன நிறைவு இல்லை. அந்தமன நிறைவை அளிப்பவன் அனுமன்தான்.

அவனைத் துதிப்பவர்களுக்கு ஒரு குறையும் இல்லை. உலக நலனுக்கு அவனை வழிபடுவோம். அவனுடைய அருளால்தான் இராவணுதிகள் தோற்று இராமராஜ்யம் ஏற்பட்டது. அர்ச்சுனன் தேர்க்கொடியில் அவன் இருந்த விசேஷத்தால்தான் தர்ம ராஜ்யம் ஏற்பட்டது.

பிற்காலத்தில் நம் தர்மம், பக்தி யாவும் நசித்தபோது அனுமன் பக்த இராமதாசாக அவதாரம் செய்தான். மறுபடி சிவாஜி மூலம் தர்ம ஸ்தாபனம் செய்யப்பட்டது. இப்போதும் எல்லா நாடுகளிலும் தர்மமும் பக்தியும் ஏற்பட அவனுடைய அருள் வேண்டும். உள்ளன்போடு இந்த சிறிய திருவடியை வணங்கி எல்லா நலன்களையும் பெறுவோமாக!

# நாச்சியார் கோயில்

திருநறையூர் என்ற தலம் தஞ்சை மாவட்டத்தில் கும்பகோணம் தாலுக்காவில் உள்ளது. நாச்சியார் கோவில் என்று தற்போது வழங்கப் படுகிறது. கும்பகோணம் திருவாரூர் பஸ் மார்க்கத்தில் கும்பகோணத்திலிருந்து 5 மைல் தூரத்தில் உள்ளது.

சோழன் கோச்செங்கணான் நம்பியைப்பணிந்து சேரபாண்டியர்களை வெல்லுதற்கு வெற்றி வாள் பெற்ற தலம்.

சுயம்பு தலங்களான திருப்பாற்கடல், திருவரங்கம், ஸ்ரீமுஷ்ணம், திருவேங்கடம், சாளக்கிராமம், வானமாமலை, புஷ்கரம், பதரிகாச்சிரமம், நைமிசாரண்யம், வடரங்கம், ஸ்ரீநிவாசம், துவாரகை என்னும் முக்திதரும் தலங்கள் 12ல் ஒன்றாகும். திருமால் திருப்பதிகள் 108ல் ஒன்று.

திருவாகிய லக்குமி பிராட்டிக்கு தேனனைய இனிய இருப்பானது பற்றி திருநறையூர் என்றும், (திரு-லக்குமி, நறை-தேன்) வண்டுகளாலும் திருச்சோலைகளின் வளத்தாலும் தேன் பெருக்கெடுத்து ஓடும் ஊரானதால் நறையூர் என்றும் பெயர் பெற்றது. வடமொழியில் சுகந்தவனம் என்று கூறப்படுகின்றது. திருமங்கை மன்னரை திருமங்கை ஆழ்வார் ஆக்கித் தந்த சிறப்புடையது. நம்பியெம்பெருமான் மகிழ்ந்துறையும் பதி இது.

கோயில் முகப்புத் தோற்றம்.



முன்னொருகாலத்தில் துஷ்டர்களான சண்டன், ஹேமன் என்ற அரக்கர்கள் அழித்தருள இந்திரனால் பிரார்த்திக்கப்பட்ட பெரிய திருவடி (கருடன்) மகாமேரு மலையின் சிகரத்தை பிடுங்கியெறிந்து அவர்களை அழித்தார். அந்த மலைத்துண்டம் இத்தலத்தில் வீழ்ந்ததால் இத்தலம் சுகந்தகிரி எனப்பெயர் பெற்றது.

இங்குள்ள திருக்கோயில் மிகவும் புராதனமானது. திருப்பணி செய்யப்பட்டு அழகாக உள்ளது. நீளம் 600 அடி, அகலம் 288 அடி, 75அடி உயரமுள்ள முன் கோபுரம் மனதை கவருகின்றது. நாற்புறமும் அழகிய நந்தவனம் அமைந்துள்ளது. வசந்த மண்டபம் அழகாக உள்ளது.

இத்தலத்து கோயில் விமானம் ஸ்ரீநிவாச விமானம் என்று அழைக்கப் படுகின்றது. ஸ்ரீ ஸ்ரீநிவாச பெருமாள் உறையும் காரணம் பற்றி இப்பெயர் வந்தது. இவருக்கு திருநறையூர் நம்பி என்றும் பெயர். மூலவர் ஸ்ரீநிவாசன் இரண்டு திருக்கைகளோடு எழுந்தருளியுள்ளார். நான்முகக்கடவுளால் பூஜிக்கப்படுகின்றார். இவர் மேதாவி முனிவருக்கும், திருமங்கையாழ்வாருக்கும் பிரத்தியக்ஷமான பெருமைக்குரியவர்.

தாயாருக்கு தனிக்கோயில் கிடையாது. பெருமாளின் மருங்கே தாயாரும் மூலவராக எழுந்தருளியுள்ளார். திருநாமம் ஸ்ரீ வஞ்சுளவல்லி நாயகி. இத்திருநாமம் வஞ்சு என்ற நீர்க்கொச்சி மரத்தினடியில் இவளைக் கண்டு மகளாக ஏற்று வளர்த்த மேதாவி முனிவரால் சாத்தப்பெற்ற அழகிய பெயர். ஸ்ரீ பரகால வள்ளல் தம் மணிவாக்கால் துதி செய்துள்ளார்.

உற்சவ மூர்த்தியின் திருநாமமும் ஸ்ரீநிவாசனே யாகும். நம்பி நாதர் என்றும் திருநறையூர் நம்பி என்றும் கூறுவர். வலப்பக்கத்தில் ஸ்ரீ வஞ்சுளவல்லி என்ற ஒரே நாச்சியாருடன் நின்ற திருக்கோலத்தில் சேவை சாதிக்கின்றார். பிராட்டியார் தன் பிரதான்யம் தோன்ற மூன்றங்குல அளவு நம்பிக்குமுன் எழுந்தருளியுள்ளாள். நாச்சியார் கோயில் என்று இத்திருப்பதி பெயர் பெற்றது இவர்களின் நல்லருளே.

மூலத்தானத்தில் சங்கர்ஷணர், பிரத்யும்னர், அநிருத்தர், புருஷோத்தமர் என்ற நான்கு மூர்த்திகளும் எழுந்தருளியுள்ளனர். இவர்கள் மேதாவி முனிவரின் கன்னியாய் வளர்ந்த வஞ்சுளவல்லியைத் தேடி வந்த உருவத்துடன் நின்றருளியுள்ளனர்.

## ஸ்ரீ பக்ஷிராஜன் சந்நிதி

மூலஸ்தானத்திற்கு கீழ் வடபால் தெற்கு நோக்கியுள்ளது. இதனுள் ஸ்ரீ பக்ஷிராஜன் (கருடன்) பரமபத வாயிலை நோக்கிஎழுந்தருளியுள்ளார். இவருக்கு மற்றத்தலங்களில்இல்லாத சிறப்பு இங்கு உளது. இவர் சாளக்கிராம திருமேனியார்—கற்சிலை வடிவானவர். அழகியர், நீள சிறகுடையவர், நீண்முடியர், அகன்ற மார்பினர், ஆஜானுபாகுவான இரும்பெரும் புஜம் உடையவர். தீரசூரர், வீரப்ரதாபர்.

“நாச்சியார் கோயில் கருடசேவை” உலகப் பிரசித்தமானது. இவர்



ஸ்ரீநிவாச நம்பி நாதர் - உற்சவர்.

மேதாவிமுனிவர் திருமகளாக வளர்ந்தருளிய திருமகளை ஆகாய வழியே தேடிவந்து இத்தலத்தில் கண்டு எம் பெருமானுக்கு குறிப்பாலுணர்த்திய வர். அன்றுமுதல் இங்கேயே உள்ளார். இவருக்கு 'அமுதகலசம்' என்னும் மோதகமானது, உவப்பாக அமுது செய்விக்கப்படுகின்றது. இவருக்கு புஷ்பாங்கிகள் அணிவிப்பர். வருடம் இருமுறை இவர் கொண்டருளும் திருவீதி புறப்பாடு சிறப்புடையது. ஒன்று மார்கழி மாதம் 4-ஆம் திருநாள், மற்றொன்று பங்குனி திருநாளின் 4-ம் நாள்.

இப்பக்ஷிராஜன் எழுந்தருளியுள்ள இடம் 10½ அடி சதுரமுள்ளது. இங்கிருந்து இவர் புறப்பாடு கண்டருளுங் காலத்து ஸ்ரீ பாதம் தாங்குவோர் நால்வராகவும், வாரைகள் சேர்ந்த பின் கோடி ஒன்றுக்கு நால்வராகவும், பின் எண்மர், பதின்மர்களாகவும் படிகளில் இறங்கியருளும் சமயம் கணக்கற்றவர்களும் ஸ்ரீபாதம் தாங்கிச் செல்வது காணத்தக்கதாம். இவரை அவ்வமயம் அற்புதமாக அலங்கரித்திருப்பார்கள்.

அவ்வமயம் அம்ஸவாகனத்தில் வஞ்சுள வல்லியார் முன்னே எழுந்தருளுவார்கள். பின்னே கருடாரூடராய் பெருமாள் தேரடிக்குச் சென்று அங்குள்ள சப்பரத்தில் எழுந்தருளி நறையூர் வீதிகளில் புறப்பாடு கண்டருள்வது கண்களுக்கு பெரு விருந்தாகும்.

பக்ஷிராஜன் சன்னிதிக்கு மேற்புறத்தே குழலூதும் கோபாலனும். பரமபத நாதனும், சிங்கப்பிரானும், எழுந்தருளியிருப்பதோடு 108 திவ்ய தேச பெருமாள்களின் திரு உருவங்களும் உள. வெளியிலுள்ள திருச்சுற்றில் யோக நரகேசரி, மத்வ பூஜா ஆஞ்சநேயர், ஸ்ரீவரத ராஜன், ஸ்ரீ சௌரிராஜன், திருவரங்கன், சேனையர்க்கோன் முதலியவர்கள் சந்நிதியுள்ளன. அப்பால் பூவராக மூர்த்தியின் சந்நிதியுள்ளது. இவர் ஸ்ரீநிவாசனுக்கும் முற்பட்டவர் என்று புராணம் கூறும். ஆதலால் பூவராசனை சேவித்த பின்பே ஸ்ரீநிவாசனை சேவிப்பர். ஸ்ரீ மணவாள மாமுனிகளும், பூர்வாச்சாரியார்களும் எழுந்தருளியுள்ளார்கள். பாலஹனுமார், வேதாந்த தேசிகர், சந்நிதிகளும் உள்ளன.

நூற்றுக்கால் மண்டபம் அற்புத சிற்பவேலைகளோடு விளங்குகிறது. இது கோச்செங்கணன் சோழனல் கட்டப்பட்டது. இப்போது திருக்கல்யாண மண்டபமாகத் திகழ்கின்றது. ஆவணியில் திருக்கல்யாணம் நடைபெறும். ஸ்ரீ கோதண்ட ராமனுக்கு சந்நிதி உள்ளது.

தல விருட்சம் வருண மரம். இது மேதாவி முனிவரால் நட்டு வளர்க்கப் பட்டதாம்.

இதன் எதிரில் ஸ்ரீ சக்ரபாணி நரகேசரி சந்நிதியாகும் தோன்றுவது. மேதாவி முனிவரால் பிரதிஷ்டை செய்யப்பட்டது. இவரை பூஜித்தால் பூத, வேதாள, பைசாச, பீதி பீடாதி நிவர்த்தியாகும் என்று கூறுவர்.

தேன்கொண்டசாரல் திருவேங்கடமுடையான் சந்நிதி மண்டபம், வாகன மண்டபம் என்றும் பெயர் பெற்றுள்ளது. கீழ்பக்கத்தில் திருமங்கையாழ்வார் சந்நிதி உள்ளது. மற்றும் நம்மாழ்வாழ்வார், உடையவர் சந்நிதிகளும் உள. ஸ்ரீ கூரத்தாழ்வாரும் எழுந்தருளியுள்ளார்.


திரு. என். ராமகிருஷ்ண

மாயூரம்.


மற்றொருவிருக்ஷம் வில்வம்

போபுர வாயிலில் விநயகர் ஆலயமுள்ளது. இவருக்கு தாமோதர

ஸ்ரீவஞ்சுளவல்லிநாயகியுடன் ஸ்ரீநிவாசர்.





மணி முத்தாறு குளம்.

பிள்ளையார், வரசித்தி விநாயகர் என்ற பெயரும் உண்டு. விநாயக சதுர்த்தி விசேஷம்.

இத்தலத்தின் புண்ணிய தீர்த்தங்கள் ஐந்து. அவை திரு மணிமுக்தா நதி, அநிருத்த தீர்த்தம், பிரத்யுமன தீர்த்தம், சாம்ப தீர்த்தம். சங்கர்ஷண தீர்த்தம். முதலாயது மணி முத்தா நதியாம். கோவிலின் வடபாலுள்ள திருக்குளமே இது. நீளம் 684 அடி, அகலம் 225 அடி. கருடன் திருபாற்கடலில் இருந்து எடுத்துச் சென்ற வைரமுடியின் ஒளி பொருந்திய மணியொன்று இத்தலத்தில் நழுவி விழுந்தமையால் இப்பெயர். இத்தீர்த்தத்திற்கு பிரம்மதேவர் இருடியாகவும், திருமால் தேவதையாகவும், விஷ்வக்சேனர் ரக்ஷகராகவும் கூறப்படுகிறது.

அநிருத்த தீர்த்தம் கோவிலின் கிழக்கே உள்ளது. பிரத்யுமன தீர்த்தம் தெற்கே உள்ளது. சாம்ப தீர்த்தம் மேற்கே உள்ளது. சங்கர்ஷண தீர்த்தம் வடக்கே உள்ளது. இவை எல்லாம் சில பர்லாங்கு தூரமே.

புராணத்தில் நான்கு தல விருஷங்கள் கூறப்பட்டுள்ளன: வகுளம், அசுவத்தம், வில்வம், வஞ்சு.

இங்கு தொழுதுயர்ந்தவர்கள் : இந்திரன், வெண்பிறையான், சூரியன், பானுதத்தன், வாயுபகவான் முதலியோர்.

இக்கோயிலில் சில கல்வெட்டுகள் உள்ளன. ஜடாவர்மன் திருபுவன சக்ரவர்த்தி சுந்தரபாண்டின் (1267 A.D.) காலத்தவை. மற்றொரு கல்வெட்டு 1516 A.D. காலத்தது. மற்றொரு கல்வெட்டு தஞ்சாவூர் நாயக்க வம்சம் ரகுநாத நாயகர் காலத்தைச் சார்ந்தது (1614 A.D.). 1675 A.D. காலத்து வெங்காஜி என்ற மஹாராஷ்டிர அரசன் காலத்திய கல்வெட்டு ஒன்று உளது.

திருமங்கைமன்னன் காலம் 7–8ம் நூற்றாண்டு என்று கொண்டால் இக்கோவிலின் புராதனத் தன்மை விளங்கும். கோச்செங்கட் சோழன் 5–7 நூற்றாண்டு என்று கொள்ளலாம்.

தேவஸ்தானத்தார் ஓர் ஸ்தல வரலாறு வெளியிட்டுள்ளார்கள். அதை ஆதாரமாகக் கொண்டு இக் கட்டுரை எழுதப்பட்டுள்ளது.



# விரும்பியதேன்?

திரு. இரா. இளங்கோதாசன் - சித்தூர்.

பல்லவி

எத்தனையோ மலைகள் இத்தரையில் இருக்க
இத்திருமலையைநீ விரும்பிய தேன்?

அநுபல்லவி

தத்துவமே எங்கள் உத்தமனே!—தெய்வத்
திருமகளை மணந்த நித்தியனே! நிமலா!—எத் ||

சரணம்

தமிழினை விரும்பிடும் முருகனைப் போலே
தவத்தினை விரும்பிடும் முனிவரைப் போலே
அமிழ்தினை விரும்பிடும் அமரரைப் போலே
அழகிய சங்கினை ஏந்திய மாலே!—எத் ||

புண்ணியம் செய்தது இம்மலை என்றா?
பக்தியின் தாயகம் தென்னக மென்றா?
கண்ணியம் மிகுந்த இத்தல மென்றா?
காசினியே வியக்கும் அரும்பெருமானே!—எத் ||

ஏழுமலை அணியின் அழகினைக் கண்டா?
இசைத்திடும் வேதத்தின் பொருளது என்றா?
வாழுமலை நமக்கு ஏற்றது கண்டா?
உள்ளன் புடனே கோயிலைக் கொண்டாய்!—எத் ||




# கற்புக்கரசி சீதாதேவி

மாயூரம் தர்மக்ஞ
எம். ராமனாத தீக்ஷிதர் - சென்னை-4

கடவுள் படைத்த பற்பல தேசங்களில் பாரதம் மிகப் பெருமை வாய்ந்தது. பிற தேசங்களிலுள்ள வரும் பாரதத்தைப் புகழ்ந்து பாராட்டுகின்றனர். அமுதம் அருந்திய வானவரும் பாரதத்தில் பிறக்க பகவானை வேண்டுகின்றனர்.

யத்யத்ரந: ஸ்வர்கஸுகாவசேஷிதம்,
ஸ்விஷ்டஸ்ய ஸூக்தஸ்ய
க்ருதஸ்ய சோபனம் ।
தேநாஜநாப்பே ஸ்மிருதி மத்ஜன்ம,நः
ஸ்யாத், வர்ஷே ஹரிர், பகவாந்
சந்தநோதி ॥

(பாகவதம்)

'ஸ்வர்கசுகத்தையளிக்கும் புண்யம் பாக்கியிருக்குமேயானால் அதைக்கொண்டு பாரதத்தில் ஒரு பிறப்பு வேண்டும் என்பது கருத்து. இத்தகைய பெருமை பாரதத்திற்கு ஏற்படக் காரணமானது, அவரவர் தர்மத்தைச் செய்து, பகவானை ஆராதிப்பதுதான். 'நாராயணாயேதி ஸமர்ப்பயாமி' என்றல்லவா? சடங்கைமுடித்ததும் கூறுகிறோம்?பகவானும், கீதையில் ''ஸ்வே ஸ்வே கர்மண்யபிரத:, ஸ்வகர்மணா தமப்யச்ய, ஸ்வதர்மே நிதனம் ச்ரேய:'' என்று, ஒருவன் தனது தர்மத்தைச் செய்ய வேண்டும். அதனால் தான் விரும்பிய பயனை யடையலாமென்று கூறுகிறார்.

அந்த தர்மங்கள் புருஷதர்மம், ஸ்திரீ தர்மம், பிரும்மசாரி தர்மம், யதி தர்மம் எனப் பல விதமாக வகுக்கப்பெற்றுள்ளன. இதை விளக்குவது வேதம். துளக்குவதாலேயே வேதமெனப் பெயர்; அதுபோல் தர்ம சாஸ்திரம், புராணங்கள், இதிஹாஸங்கள். கதைகளைச் சொல்லி இனிமையாக இதயத்தில் ஈடுபடுத்துவது இதிஹாஸங்கள். இதிஹாஸங்களில் இராமாயணம் பெருமை வாய்ந்தது. மெய் மறந்து தவம் செய்த வால்மீகி முனிவர், பிரும்ம தேவனின் அருளாலும், தனது தவத்தின் வலிமையினாலும் இயற்றியதல்லவா? இராமாயணம் பாரதம் போற்றும் பெருமை வாய்ந்தவனும் கலியுக வரதனாயும் விளங்கும் வெங்கடராமனையல்லவா கூறுகிறது? அதனாலும் அதற்குப் பெருமை.

''ராமோ விக்ரஹவான் தர்ம:'' என்று உருவமெடுத்த தர்மமே இராமன் என்பதால் அவனை விளக்குவது தர்ம சாஸ்திரமாகத்தானே இருக்க வேண்டும்.

வால்மீகி முனிவர் இராமாயணத்திற்குப்பெயர் சூட்டுகின்றார். இராமனைப்பற்றிய வரலாறு, ஸீதையின் மஹத்தான சரிதம் அல்லது ராவண வதம் என்று. இங்கு ''ஸீதாயாஸ்ச சரிதம் மஹத்'' என்று கூறுவதால் அப்பெயரே அவருக்குப் பிடித்தமானதென்று தோன்றுகிறது. 'மகத்' என்ற அடைமொழியை அதற்கே அளிக்கின்றார். ஆகையினால் அதைப் பற்றி இங்கே கூறுவோம்.

ஸீதையின் சரிதம் என்றால் பாதிவ்ரத்யம் — கற்பு என்று பொருள். ஒரு பெண்ணைப் பற்றி அவள் சரிதம் எப்படி? என்று கேட்டால், கற்பைப்பற்றியே அக்கேள்வி என்று நினைத்து பதில் அளிப்பவர், மிகத் தூய்மையானவள். என்று பதிலளிக்கின்றார். ஆகையினால் ஸீதையின் பாதிவ்ரத்யம், ஒரு ஹாரத்தில் நடுவில் அமைந்த ஹீரமணி போல் இராமாயணத்தின் ஜீவ நாடியாக நடு மணிபோல் விளங்குகிறது. பெண்ணுக்குத்தனது கற்பைக் காப்பது சுயதர்மம். நமது பாரத நாட்டில் அதனாலேயே பெண்களுக்குப் பெருமை. அருந்ததி அனஸூயை முதலிய பெண்கள் கற்புக்கரசியாக விளங்கினார்கள் என்பது புராண வரலாறு. இவ்விதமிருக்க ஸீதையின் கற்புக்கு என்ன பெருமை. மஹத் என்ற அடமொழியைக் கூற காரணம் யாது. ஸ்திரீகள் எல்லோரிடத்திலும் உள்ளது தானே என்றால், அதைப் பற்றி ஆராய்ந்து பார்ப்போம்.

இராமபிரான் தந்தையின் கட்டளைப்படி கானகம் செல்ல புறப்பட்டார். ஸீதையினிடம் தான் பதினான்கு வருஷங்கள் கானகம் சென்று திரும்பும் வரை, மஹாராஜனான பரதனிடம் இவ்வாறு நடந்து கொள்ள வேண்டுமென்று பலவிதம் கூறுகிறார். இங்கு கவனிக்க வேண்டியது. அரசாங்கத்தில் பணிப் பெண்கள் பலர் பணிவிடை செய்ய, ஜனகராஜனின் அன்புக்குப் பாத்ரமாய் மனமகிழ்ச்சியுடன் வளர்ந்து, சக்ரவர்த் திகுமாரனக்கும் வாழ்க்கைப்பட்டு அரண்மனையிலுள்ள பெண்களுடன் குதூஹலமாக வாழும் சமயத்தில்,திடீரென்று இடி விழுவது போல், அகண்ட ராஜ்யத்தைவிட்டு பதினான்கு வருஷங்கள் காட்டிற்குப் போக ஏற்பட்டது கணவனுக்கு.

கைகேயி இராமனைத்தான் காட்டில் வசிக்க வரன் கேட்டாள். தசரதரும் ராமனிடம் அதையேதான் கூறினார். ஸீதைஅயோத்தியில்இருக்கலாம்கண வன் இராமனும் அயோத்தியில் இரு, பரதனிடம் இவ்விதம் நடந்துகொள் என்று கூறுகிறான். தர்ம முறைப் படியும் அரசாங்க சட்டப்படியும். தங்குவது நியாயம். சிறு வயதில் அரசகுமாரி காட்டில் வசிப்பது மிகக் கஷ்டம் என்பதும் தெரிந்ததே. இவ் விதமிருக்க ஸீதை இராமனிடம் யாது கூறினாள்? உலகத்தில் பலர் தார்மிகர்கள் ஆனாலும், தர்ம நெறி யில் கொஞ்சமும் தவறுவதவரானா லும், ஆபத்து, மனக்லேசம் ஏற்படும் சமயம் தர்மத்தைக் கை விடுவது என் பது பெரும்பாலும் உள்ளது. அப் பொழுதும் விடாதவர் மிக அரிது. இங்கு வனவாச கஷ்டத்தை யறியாத வளல்ல ஸீதை. ஆனாலும், கணவனைவிட்டுத் தனியாக இருப்பது ஸ்வர்க ஸௌகமானாலும் எனக்கு வேண்டாம் என்றாள்.

ஸ்வர்கேபிச விநா வாஸ: பவிதா யதி ராகவ| த்வயாமம
நரவ்யாக்ர நாஹம் தமபி ரோசயே||

ஸ்வர்கம் என்பது எது துக்கக் கலப்பற்றதோ. எதற்கு மேல் சுகம் கிடையாதோ, நினைத்ததெல்லாம் நினைத்தவுடன் கிடைக்குமோ அந்த சுகம். இதைவிட கணவனுடன் காட் டில் வசிப்பதைப் பெரியதாக நினைத் தாள்.

இதைக் கேட்ட இராமபிரான் ஏ ஸீதே! கரடுமுரடான ப்ரதேசத் தில் நடப்பதும் வசிப்பதும் கஷ்டம். மேலும் புலி-கரடி-சிங்கம் முதலிய துஷ்டப்ராணிகள் சஞ்சரிக்குமிடம். அரக்கர்கள் பயங்கரமாகத் தோன் றுவர், பலவிதத்தில் துக்கப்பட நேரும்' ('ஸீதே துக்கமதோ வநம்') என்று பல முறை கூறுகிறார். இவ் வளவையும் கேட்டபின், இனிமேல் சமாதானமாகப்பேசினால் போதாது. ஸாம உபாயத்தை விட்டு அடுத்த உபாயங்களையும் உபயோகிக்க வேண்டுமென்று நினைத்துக் கூறி னாள். ''அனன்யபாவாம் அனுரக்த சேதஸம் த்வயா வியுக்தாம் மரணாய நிச்சிதாம்| நயஸ்வ மாம் ஸாதுகு ருஷ்வ யாசனாம் நதே மயாதோ குரு தாப விஷ்யதி|| ''மனம் வாக்குகாயம் மூன்றினாலும் தங்களிடமே உள்ள வள். தங்களை விட்டுப்பிரிந்தால், உயிரை இழந்து விடுவேன். ஆத லால் அடிபணிந்து வேண்டுகிறேன் என்னை அழைத்துச் செல்லவேண்டும். என்னால் ஒருபாரமும் இராது'' என்று கூறி மனதில்பீதியைஏற்படுத்தினாள். இதுதான் பேதோபாயம். இதற்கும் ஸமாதானம் சொல்லி தங்கும்படி செய்ய யத்னம் செய்தார் இராம பிரான். இதற்கு மேல் என்ன செய்யமுடியும். அடுத்த உபாயம் தண்டம். அதை கணவனிடம் எப் படி உபயோகிப்பது. முடியாத காரியம். இனி தனது ஸங்கல்பத் தைக்கைவிட வேண்டியது தான் என்ற நிலைமை ஏற்பட்டது. இது மிகபயங்கரமான நிலை-இங்கும் தனது தர்ம நெறியால் வெற்றி பெற்றாள். இங்கு வால்மீகி ''ப்ரண யாச்ச ப்ரஹர்ஷாச்ச பரிசிக்ஷேப ராகவம்'' என்றார். ''பரிசிக்ஷேபம்'' என்றால் அவமதித்துப்பேசுவது. கண வனை அவமதித்துப் பேசுவதே தண் டோபாயம் போல் உள்ளது அப்படி என்ன கூறினாள்?

கிம் த்வா, அமன்யத வைதேஹ:
பிதா மே மிதிலாதிப:|
ராம? ஜாமாதரம் ப்ராப்ய ஸ்திரியம்
புருஷவிக்ரஹம் ||

என்று. 'மிதிலைக்கு அரசனான எனது தந்தை என்ன நினைப்பார் - புருஷ வேஷம் பூண்ட பெண்ணை மாப்பிள்ளை யாக அடைந்து ஏமாந்தேனே என் றல்லவா நினைப்பார்'. இதைக்கேட் டவுடன் ஸீதையை அழைத்துச் சென் றார் இராமபிரான்.

தெய்வம் போல் பணிவிடை செய்ய வேண்டிய கணவனை இவ் விதம், அவமதித்துப் பேசலாமா? தெய்வம் தொழாள் கணவனைத் தொழு தெழுவாள் பெய்யனப் பெய்யுமழை என்று தெய்வத்தைக் காட்டிலும் மேலாக அல்லவா மதிக்க வேண்டும் என்று கேட்கலாம். ஆனால் ஸீதாபிராட்டியோ தர்ம மறி யாதவளல்ல. வாத்ஸ்யாயன மஹரிஷி காமசாஸ்திரம் எழுதினார். காமத்தை எழுதிப்படித்தறிய வேண்டுமா? வேண்டாம். ஆனால் மஹரிஷி எழுதி னார் என்றால், தர்ம சூட்சமங்களை பெண்களுக்கு அறிவிக்க வேண்டு மென்று எழுதினார். அதில் ஒரு ஸூத்ரம்; ''நாயகஸ்ய, வ்ரதம் உப வாஸம்ச, ஸ்வயமபி கரணேநாநு வர்த்தேத! வாரிதாயாம்ச நாஹமத்ர நிர்பந்தனீயேதி தத்வசஸோநிவர்த் தனம்'' என்பது. கணவனுடைய விரதம், உபவாஸத்தை தானும் செய்து பின் பற்ற வேண்டும். அப் பொழுது கணவன் தடுத்தாலும், இதில் தாங்கள் தலையிடக் கூடா தென்று மறுத்துப் பேசலாம் என்பது அதன் பொருள்.

இராமபிரான் 14 வருஷங்கள் ரிஷி வேஷத்துடன், காட்டிலுள்ள காய் கனிகளை உண்டு வாழ்வது ஆர்ஷ வ்ரதம். இதை மனைவியான தானும் பின்பற்றுவதாகக் கூறினாள். அதை அவளிடமுள்ள அன்பின்காரணமாகத் தடுத்தார் இராமன். அதை மறுத்துப் பேசும் பொழுது அதட்டித்தான் பேச வேண்டியதாயிற்று. வேறுவிதமாய் தனது தர்மத்தைக் காக்க வழிஇல்லை என்றுதான் அவ்விதம் சொன்னாள். இந்த தர்மத்தையறிந்த மஹரிஷி வால்மீகியும் 'பரிசிக்ஷேப ராகவம்' என்றார்.

இதுபோல் தர்மசூட்சமங்கள் இதி ஹாஸ புராணங்களில் புதைந்துகிடக் கின்றன. அவற்றை நீதி சாஸ்திர மறிந்தவன் புதையலைக் கண்டு பிடிப் பது போல, தர்மசாஸ்திரத்தையும் ஒருகண்ணால் நோக்கி இதிஹாஸங் களுக்குப் பொருள் கூற வேண்டும்.

தற்காலம், ஸ்திரீகள் நமது தேசத் தில் பதிவ்ரதா தர்மத்தைக்கைவிடா மல் பாதுகாக்கிறபடியால் - அவை களை பிற்காலத்திலும் நன்கு காக்க வேண்டு மென்று பள்ளியிலும் காலே ஜிலும் உத்யோகத்திலும் ஈடுபடும் பெண்கள் அறியும் பொருட்டும், அவர்களுக்கு ஆஸ்திகத்தையும், தெய்வம் மற்றும் பெரியோர்களிடம் மதிப்பும் பக்தியும் விருத்தியடையும் படியும் கலியுக வரதனான வேங்கடே சப் பெருமான் அருள்புரியவேண்டும்.

ௐ

# தனக்கொரு வீடு

திரு. நீ. தங்கவேலன் - வேலூர்,

'' தாவாரம் இல்லை தனக்கொரு
வீடில்லை
தேவாரம் ஏதுக்கடி?—குதம்பாய்
தேவாரம் ஏதுக்கடி? ''

என்பது குதம்பைச் சித்தருடைய பாடல்.

குதம்பை என்பது ஒரு காதணி. அந்தக் காதணியை அணிந்த ஒரு பெண்ணை முன் நிறுத்திக் ''குதம்பாய்! குதம்பாய்!'' என அழைத்துப் பாடுவதால் அவர் குதம்பைச் சித்தர் எனப்படுகிறார்.

அந்தக் குதம்பைச் சித்தர் இந்தப் பாடலில் ஒரு கேள்வியைக் கேட்கிறார். ''சமயத்தின் அடிப்படைக் கொள்கைகளைப் பின்பற்றி வாழாமல், சமய நூல்களை மட்டும் படிப்பதில் என்ன பயன்?'' என்று கேட்கிறார். ''தாவாரம்'' என்பதும் 'தனக்கொரு வீடு' என்பதும் சமயத்தின் அடிப்படைக் கொள்கைகள். ''தேவாரம்'' என்பது ஒரு சமயநூல். ''தாவாரமும் தனக்கொரு வீடும் இல்லாதவர்களுக்குத் தேவாரம் மட்டும் எதற்காக!'' என்று கேட்கிறார்.

''தா'' என்றால் துன்பம், வருத்தம் என்று பொருள். ''தாவே வலியும் வருத்தமும் ஆகும்'' — என்பது தொல்காப்பியம். 'வாரம்' என்றால் பங்கு என்று பொருள். நிலத்தை வாரத்துக்குவிடுதல்என்னும்வழக்கில் இந்தப் பொருள் வருவதைக் காணலாம். 'தாவாரம்' என்றால் துன்பத்தில் பங்கு. அதாவது பிற உயிர்களின் துன்பத்தில் பங்கு பெறுதல். பிற உயிர்களின் துன்பங்கண்டு இரங்கி உதவுதல். அப்படி இரங்கி உதவுகின்ற அன்புடையவர்களாக நாம் வாழவேண்டும்.

எல்லாச் சமயங்களுக்கும் பொதுவாக இருக்கும் அடிப்படைக் கொள்கைகளில் ஒன்று, 'மக்கள் எல்லோரும் அன்புடையவர்களாக வாழவேண்டும்' என்பதாகும். அன்பு இருந்தால்தான் பிற உயிரையும் தன் உயிர் போல் எண்ண முடியும். பிற உயிரின் துன்பத்தைத் தன் உயிரின் துன்பம் போல் கருதி அத்துன்பத்தைப் போக்க முடியும்.

எல்லாச் சமயங்களுக்கும் பொதுவாக இருக்கும் அடிப்படைக் கொள்கைகளில் மற்றொன்று, 'மக்கள் தன்னலப்பற்று மிக்கவர்களாக இல்லாமல் பிறர் நலம் நாடுபவர்களாக வாழவேண்டும்' என்பதாகும்.

'தனக்கு' என்றால் தன்னலப்பற்றுக்கு என்று பொருள். 'வீடு' என்றால் விடுதலை - விடுபடுவது என்று பொருள்- 'தனக்கு ஒரு வீடு' என்றால் தன்னலப்பற்றுக்கு ஒரு விடுதலை. அதாவது தன்னலமே நோக்கமாக இராமல் பிறர் நலத்தில் நாட்டம் கொண்டு இருத்தல். அப்படி பிறர் நலத்திலேயே நாட்டம் கொண்டு தன்னலப்பற்று அற்று நாம் வாழவேண்டும்.

அன்புக்கும் தன்னலத்துக்கும் ஒரு தொடர்பு உண்டு. அன்பு குறையத் தன்னலம் பெருகும். அன்பு பெருகப் பெருகத் தன்னலம் குறையும். அன்பு இல்லாதவர்கள் தன்னலம் ஒன்றையே கருதுபவர்களாக இருப்பார்களே யன்றி, பிறர் நலத்தை எண்ணுபவர்களாக இருக்கமாட்டார்கள். அன்பு உடையவர்கள்தாம் தன்னலத்தைப் பெரிதாகக் கருதாமல் பிறர்நலத்தையே பெரிதாக எண்ணிச் செயல்படுவார்கள்.

'' அன்பிலார் எல்லாந் தமக்குரியர்
அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு''

என்று திருவள்ளுவரும் இதனைத் தான் சொல்கிறார்.

பிற உயிரின் துன்பத்தைத் தன் துன்பம் போல் எண்ணி இரங்கி உதவுகின்ற அன்புடைமை: தன்னலப் பற்று அற்று பிறர்க்கென வாழும் அருளுடைமை ஆகிய இந்த இரு பண்புகளையும் பெற்று வாழாமல், தேவாரப் பாடல்களை மட்டும் படித்துக் கொண்டிருப்பதில் என்ன பயன்? ஒரு பயனும் இல்லை. சமய நூல்களைப் படித்துக்கொண்டு மட்டும் வாழாமல் சமயத்தின் அடிப்படைக் கொள்கைகளான அன்பும் அருளும் உடையவர்களாக நாம் வாழ வேண்டும் என்னும் கருத்தைத்தான் குதம்பைச் சித்தர் மேற்கண்ட பாடலில் தெரிவிக்கிறார்.

''பிறருடைய துன்பத்திலே பங்கு பெற்று பிறருக்கு உதவியாக வாழ்வதும் இல்லை. தான், தன்னுடையது என்ற தன்னலப்பற்றையும் விடுவதில்லை. அப்படிப்பட்டவர்கள் தேவாரம் படிப்பது எதற்காகவோ?'' என்று கேட்கிறார் குதம்பைச்சித்தர்.

''பிற உயிரின் துன்பங்கண்டு இரங்கி உதவாதவர்களுக்கும், தன்னலத்தை விட்டுப் பிறர் நலத்தை நாடாதவர்களுக்கும், தேவாரம் எதற்கு? அப்படிப்பட்டவர்கள் தேவாரம் படித்தென்ன? திருவாசகம் படித்தென்ன? ஒரு பயனும் இல்லை'' என்கிறார் குதம்பைச் சித்தர்.



# திருவயலூர் சிறப்பு



டாக்டர். ஜி.டி. கோபாலகிருஷ்ண நாயுடு,
கோயம்புத்தூர்.

## சுந்தரத் தாண்டவ மூர்த்தி

இம்மூர்த்தியின் விக்கிரகம் கண்டு களிக்க வேண்டியதொன்று. எம்பெருமான் ஞான முத்திரை காட்டி மோனத்தோடுள்ள கோலமும் நம்மை பரவசப்படுத்துகின்றது. ஆண்டவன் கால் தூக்கி ஆனந்த நடனமாடுகின்றார். மோனம் கலந்திட, ஆனந்தம் மேலிட, முன்னந்த பாம்பு புலியுமே பார்த்திட, ஆனந்த நடனமாடுகின்றார். இனித்த முகத்தில் புன்னகை! மனிதப் பிறவிகள் சித்தம் மகிழ்கின்ற காட்சி! ஆனந்த நடனமாடும் அம்பலக் கூத்தனைக் கண்டு உள்ளம் சிலிர்க்கின்றது.

வயலூரில் குடிகொண்ட சுத்தரத் தாண்டவமூர்த்தியின் திருவடிவம் கூத்தப்பெருமான் திருவுருவிலிருந்து சற்று மாறுபட்டிருக்கிறது. இங்கு திருவாசி இல்லை; காலின் கீழ் முயலகன் இல்லை; சடையில் சடைமுடி இல்லை. இத்திருநடனத்திற்கு சுந்தரத் தாண்டவம் எனப் பெயரும் உண்டு.

திருமூலர் இத்திருத்தாண்டவத்தைக் கண்டு மகிழும் காட்சியில் நாமும் ஈடுபடுவோம்.

'' புரிந்தவன் ஆடிற் புவனங்கள் ஆடும்;
தெரிந்தவன் ஆடும் அளவு எங்கள்
சிந்தை;
புரிந்தவன் ஆடிற், பல பூதங்கள்
ஆடும்;
எரிந்தவன் ஆடல்கண்டு இன்புற்ற
வாறே.''

எனத் திருமூலர் இன்புறுகிறார். வயலூர் பதியில் அருள் பெற்றவர்கள் உள்ளம் மலர, எம்பெருமான் ஆடும் சுந்தரத் தாண்டவம் அழகு, அழகுக்கே அழகு செய்வதாக அமைகிறது.

## நடராசரின் ஆடல் திருவுருவம்

இறைவன் செய்யும் ஐந்து தொழில் களைத் தான், 'ஆடல்' என்றும், 'நடனம்' என்றும், 'தாண்டவம்' என்றும், 'கூத்து' என்றும் கூறப்படுகிறது. அது போலவே, அந்தக் கூத்தினைச் செய்யும் இறைவனை—நடராசப்பெருமானை-கூத்தப்பெருமான்-ஆடல்வல்லான் என்ற பெயர்களால் அழைக்கின்றோம்.

இறைவனின் முழு உருவம் வானம். வான் என்னும் உடலின் உறுப்புகளாக அமைந்த கைகள், திருவடிகள், சடைமுடி ஆகியனவும், இறைவன் ஏந்தியிருக்கும் தீச்சுடர் ஆகியனவும் ஆடலின் கருத்தை விளக்கும் அடையாளங்கள்.

திருக்கைகள் : பரந்து விரிந்த உடல் என்னும் வானத்தின் நான்கு திக்குகளை உணர்த்துவன நான்கு திருக்கைகள்.

திருவடிகள் : வலக்காலை ஊன்றி, இடக் காலைத் தூக்கி ஆடுகின்றார் இறைவன். கடவுளின் ஐந்து தொழில்களும் மறைத்தலையும் அருளுதலையும் குறிப்பனவே திருவடிகள். ஊன்றிய கால் மறைத்தலையும், தூக்கிய கால் அருளுதலையும் குறிக்கும்.

அபயகரம் : அருளும் கை. இறைவனின் ஒரு கை, அமைந்த கையாக இருப்பதன் நோக்கம் உயிர்களின் அச்சத்தை நீக்கிக் காக்கும்—தொழிலைக் காட்டும் அடையாள மாகும்.

வீசிய கை : உயிர்கள் பேரின்ப நிலையினை அடைவதைக் காட்டுவதே வீசிய திருக்கை.

சடைமுடி : சடைமுடி பரந்த அறிவின் அடையாளம். கடவுள் அறிவே உருவானவர் என்ற கருத்து இதில் அடங்கும்.

## திருவிழாக்கள்

வயலூரில் கார்த்திகை, சஷ்டி ஆகிய நாட்களில் அபிஷேகம் நடைபெறும். சுவாமி திருவீதி புறப்பாடு உண்டு.

வைகாசி மாதம் விசாக நக்ஷத்திரத்தில் பாற்குட அபிஷேகம். தமிழ் புத்தாண்டு தினத்திலும், தை அமாவாசை, மாசிக் கார்த்திகை, பங்குனி உத்தரம் ஆகிய நன்னாட்களில் மஹாபிஷேகம் நடைபெறும்.

வைகாசி மாதம் பிரம்மோத்சவம். ஆனி மூல நக்ஷத்திரத்தில், திருப்புகழ்பாடித் தந்த அருணகிரி நாத சுவாமிக்கு வெகு சிறப்பாக நடைபெறும் உற்சவம், கண்கொள்ளாக் காட்சியாகும்.

இத்தகு பெருமை உடைய திருச்சிக்கு அருகில் அமைந்த வயலூருக்கு வாழ்நாளில் ஒரு முறையாவது சென்று, முருகனை வழிபட்டு உயர்கதி அடைவோமாக!

✿

வீட்டுக் கூரையின் மேலிருந்து விழும் மழை ஜலம் புலித்தலை போன்ற குழாயின் மூலமாகக் கீழே தரையில் விழும்போது, பார்வைக்குப் புலித்தலையினின்றும் விழுவதாகத், தோன்றினாலும் வாஸ்தவத்தில் ஆகாயத்திலிருந்து விழுகிறது. அதுபோல, தெய்வீகம் வாய்ந்த மனிதர்கள் கூறும் உபதேச மொழிகள் பார்வைக்குக் கேவலம் மனிதர்களிடமிருந்து வருவதாகத் தோன்றினும், வாஸ்தவத்தில் ஈசுவர ஸன்னிதியினின்றே வருகின்றன.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

(16-ம் பக்கத் தொடர்ச்சி)

''உயிர் அனைத்திடத்துப் வெறுப் பின்றி, நட்பும் கருணையும் உடைய வனாய், மமகாரம் அகங்காரம் இல் லாது, இன்ப துன்பங்களைச் சமமாகக் கருதி, பொறுமையுடன் கூடி, எப் பொழுதும் சந்தோஷமாயிருப் பவனாய், யோகியாய், தன்னடக்க முடையவனாக, திடபுத்தி யுடைய வனாக, என்னிடத்தே மனம்புத்தியை சமர்ப்பித்தவனாக யார் என் பக்த னாக விளங்குகின்றானோ அவன் எனக் குப் பிரியமானவன்''

13-ம் சுலோகத்திலிருந்து இந்த அத்யாயத்தின் இறுதியான 20-வது சுலோகம் வரை உள்ள எட்டு சுலோ கங்களில் பகவான் தனக்குப் பிரிய மான பக்தன் எப்படி இருப்பான் என்பது பற்றி விளக்கம் தருகிறார். இந்த எட்டு சுலோகங்கள் 'அமிரு தாஷ்டகம்' என்று அழைக்கப்படு கின்றது. இதைப் பக்தி யோக சாரம் என்றோ பக்தி ரஸாம்ருதம் என்றோ கூறலாம். 9 முதல் 12 வரையிலான நான்கு அத்யாயங் களின் சுருக்கமாக இவை அமை கின்றன.

பகவானுக்குப் பிரியமான பக்தன் நற்குணங்களின் உறைவிடம் ஆவான். அவனிடம் எத்தகைய குணங்கள் அமையப் பெற்றிருக்கும் என்பதைப் பகவான் ஒரு பெரிய பட்டியலே போட்டுத் தருகிறார். எதற்காக இந்த எட்டு சுலோகங் களில் உண்மை பக்தனைப் பற்றிய இவ்வளவு நீண்ட விளக்கம் என்ற ஐயம் நமக்கு எழலாம். நாமனைவரும் பகவானிடம் பக்தி செலுத்தும் பக் தர்கள் என்று நம்மைப் பற்றி நினைத் துக் கொண்டிருக்கிறோம் இல்லையா? அத்தகைய பக்தர்களாகிய நம்மிடம் இங்கே பகவான் குறிப்பிடும் குணங் கள் இருக்கின்றனவா என்று நம்மை நாமே கேட்டுக் கொள்வதற்கும், அதற்கேற்ப நம்மிடம் இல்லாத பல நற்குணங்களை வளர்த்துக் கொள்வ தற்கும், இந்த விளக்கம் பெரிதும் உதவிகரமாக இருக்கும்.

பக்தனிடம் இருக்கவேண்டிய முத லாவது நற்குணம் வெறுப்பின்மை யாகும். 'த்வேஷம்' என்றால் வேற் றுமை என்று பொருள். 'அத்வேஷ் டா' என்றால் வெறுப்பு இல்லாதவன் என்பது கருத்து. வெறுப்பு மேலும் மேலும் வேற்றுமையை வளர்க்கும். நாம் ஒருவரை வெறுக்கிறோம் என் றால் என்ன பொருள்? நமக்கும் அவ ருக்கும் இடையே ஒரு தடுப்புச் சுவர் இருக்கிறது, அது நேருக்கு நேர் ஒரு வரை மற்றவர் பார்க்க வொட்டாது தடுக்கிறது என்பது தானே அர்த்தம். அவன் வேறு நான் வேறு என்ற வேற்றுமை எண்ணம்தான் அந்தத் தடுப்புச் சுவர். வேற்றுமை எண்ணத் தால் விரோதம் வளர்கிறது. அது உடல் எங்கும் நஞ்சைப் பாய்ச்சு கிறது. பிறரை வெறுப்பவன் உண்மை யான பக்தன் ஆகமாட்டான். எதை யும் எவரையும் எந்த நிலையிலும் வெறுக்காதவனே உண்மை பக்தன் ஆவான்.

'ஸர்வபூதானாம் அத்வேஷ்டா' என் பது மனிதர்கள் மட்டுமின்றி உயிர் கள் அனைத்திடத்துமே வெறுப்பு இல் லாதவன் என்பதைக் குறிக்கிறது.

மைத்ரஃ எல்லா உயிர்களிடத்தும் நட்புக் கொள்வது என்பது சான்றோ னுக்கு அழகு. அன்பே சிவம். அன்பு உள்ள இடத்தில் அருள் இருக்கும். 'அன்பின் வழியது உயிர் நிலை அஃது இலார்க்கு என்பு தோல் போர்த்த உடம்பு' என்பார் வள்ளுவர். உயிர் களை இணைக்கும் பாலமாக விளங்கு வது நட்பு அல்லது அன்பு ஆகும்.

கருணை: ஒருவன் மற்றவருடன் நட்பு செலுத்துவதில் இரண்டு விதங் கள் உண்டு. பிறர் தனக்குப் பயன் பட வேண்டும் என்பதற்காகப் பிற ரிடம் நட்பு செலுத்துதல் ஒரு விதம். இது சுயநலத்தை அடிப்படையாகக் கொண்டது. இதில் எந்த வித மேன் மையும் கிடையாது. மாறாக தான் பிறருக்குப் பயன்படவேண்டும் என் பதற்காகப் பிறரிடம் நட்பு பாராட்டு தல் மற்றொரு வகை. இது கருணை எனப்படுகிறது. பாற்கடலைக் கடைந்த சமயம் ஆலகால விஷம் வெளிப்பட்டதைக் கண்டு அனைவரும் தங்கள் உயிருக்கு அஞ்சி நின்ற வேளையில் அதைத் தன் கண்டத்தில் ஏந்தி உயிர்களைக் காத்து நின்றாரே! அந்த சிவபெருமான் கருணாமூர்த்தி யின் அவதாரம்!

நிர்மமஃ நிரஹங்காரஃ எனது, யான் என்ற எண்ணம் அறவே அற்றவர். தன்னை எவன் பிறருக்கு முழுமை யாகத் தியாகம் செய்கின்றானோ அவனிடம் யான், எனது என்ற எண்ணம் எப்படி இருக்க முடியும்?

ஸமதுக்க ஸுகஃ இன்ப, துன்பங் களைச் சமமாகக் கருதுகின்றவன். வேற்றுமை எண்ணங்கள் மனதில் இருக்கும் பொழுதுதான் இன்பதுன் பங்களைப் பற்றிய உணர்ச்சிகள் மனத்தில் எழும். தன் உயிர் தான் அறப் பெற்றானுக்கு இன்பம் ஏது, துன்பம் ஏது? அவனுக்குப் பனியும் ஒன்று தான், வெயிலும் ஒன்று தான். அத்தகைய சான்றோனை மன் னுயிர் எல்லாம் கைகூப்பித் தொழும்.

க்ஷமீ: பொறுமையே வடிவெடுத் தவன். பிறர் நம்மை இகழ்கையில் நாம் ஏன் சினப்படுகிறோம்? நம் மிடம் உள்ள 'அகங்காரம்' சீறுவ தால். அகங்காரம் இல்லையெனில் உள்ளேயிருந்து சீறுவதற்கும் சினப் படுவதற்கும் எதுவுமில்லை. தன்னை வெட்டுபவரையும் தாங்கும் பூமி யைப் போல, தன்னை இகழ்வோரை யும் அருள் பாலித்துக் காப்பது பக் தனின் நிலைமையாகும். மகான்கள் வாழ்க்கை இதற்குச் சான்றாக உள்ளது. அகழ்வாரைக் தாங்கும் நிலம் போலத் தம்மை இகழ்வாரைப் பொறுத்தல் தலை என்னும் குறள் வாக்கின் விளக்கமாக ஸ்ரீ ராம கிருஷ்ண பரமஹம்சர், ஸ்ரீரமணர், குருதேவர் ஸ்ரீ சுவாமி சிவானந்தர், போன்ற மகான்கள் வாழ்ந்து காட் டினர். (தொடரும்)

(14-ம் பக்கத் தொடர்ச்சி)

அப்போதே பறிக்கப்பட்ட இள வழுக்கையுடைய இளநீரால் பித்தம், தாகம் விலகும். பழைய இளநீரால் ஜலதோஷம் அவை சம்பந்தப்பட்ட ரோகமும் வர வாய்ப்புண்டு.

ஆழாக்கு அளவில் குடிக்கும் வெந்நீரால் அஜீரணம், புளியேப்பம், நெற்றியில் நோவு, சுரம், காசம் குறையும்.

காய்ந்து ஆறிய வெந்நீரால் விக்கல், வாந்தி, மயக்கம், திரிதோஷம், வாதாதிக்கம் போகும்.

## பால்

வியாதியற்றவளின் பால்—முலைப் பாலால் திரிதோஷங்கள், நா வரட்சி, சன்னி பாதம் தீரும். ஔஷத அனுபானத்திற்கும், கலிக்கத்திற்கும் ஆகும்.

கரிய மாதரின் முலைப்பால் கண் வயித்தியத்திற்கும் செம்மை நிற மாதரின் முலைப்பால் முத்தோஷம் நீங்குவதற்கும் பயன்படும்.

வேசியின் முலைப்பாலால் திரிதோஷமும், வாத.ரோகமும், கிரந்தி இரணம் இவை உண்டாகும்.

பொதுவாக பசுவின் பாலானது பாலருக்கும், பழய சுரம், இரணம் உள்ளவர்கட்கும், சூலை, துர்பலம் உள்ளவர்கட்கும் நல்லது.

வெண்மை நிற பசும்பாலால் பித்தமும், செம்மை நிற பசும்பாலால் வாத தோஷமும், கருமை நிற பசும் பாலால் கபதோஷமும், கருமை கலந்த பொன் நிற பசும்பாலால் திரிதோஷமும் நீங்கும்.

எருமைப் பாலால் திமிர் வாய்வு ஏற்படும். புத்தி கூர்மையை குறைக்கும். மருந்தின் குணத்தையும் கெடுக்கும்.

வெள்ளாட்டு பாலால் வாதபித்தம், சுவாச காசம், கபதோஷம் இரணம் இவைதீரும். நல்ல பசியை உண்டாக்கும்.

செம்மறியாட்டுப்பாலால் திரிதோஷம் ஓங்கும். வயிற்று வலி, உப்பிசம், மேற்சுவாசம், வாய்வு அதிகரிக்கும். பத்தியத்திற்குஉதவாது.

ஏடு நீக்கிய பாலால் சப்த தாதுக்களின் சீரண முண்டாம். வாத பித்த கப தோஷங்கள் நீங்கும்.

தேங்காய்ப் பால் விடாமல் குடித்து வந்தால் வாத பித்த ஆதிக்கமும், சுக்கில விருத்தியும் உண்டாகும்.

ஆலம் பாலால் பிரமேகம் நீங்கும். ஆடும் பற்களை இறுக்கி, தலையில் குளிர்ச்சியையும், தாது புஷ்டியையும் தரும்.

காரமும் உஷ்ணமும் உள்ள அத்திப் பால் பித்தம், நீரிழிவு, ரத்த மூத்திரம் இவைகளை நீக்கும்.

எருக்கம் பால் வாத கட்டிகளை கரைப்பதன்றி, வாதநோய், சன்னி பாதம், முதலியவைகளைத் தீர்க்கும். பற்பல சரக்குகளை செந்தூரம் செய்ய உதவும்.

காட்டாமணக்குப் பாலால் மூத்திரத்தோடு விழுகின்ற வெள்ளை, மேகம், வயிற்று வலி, சருமக்கட்டி இவைகள் நீங்கும்.

## தயிர்

பசுவின் தயிரால் பசியுண்டாகும், சீரணரோகம், தாகம், சரீர எரிச்சல் இவை நீங்கும்.

எருமைத்தயிரால் எரிச்சலும் பித்த நோயும் போகும். கபம், கரப்பான், வாத ரோகம், புத்திமந்தம், கண்ணுக்கு குளிர்ச்சி யுண்டாகும்.

## நெய்

பசுவின் நெய்யால் தாகமும், வாந்தி, பித்தாதிக்கம், இரணம், பிரமேகம், வயிற்றின் எரிச்சல், பித்த விக்கல், இருமல், வயிற்று வலி, அஸ்த்தி சோம்பல், மூலரோகம் இவைகள் குறையும்.

எருமை நெய்யால் அறிவு, அழகு, கண்ணொளி இவைகள் மத்தியமாகும். வாத பித்தம், கரப்பான் இவையுண்டாகும்.

கலப்பு நெய்யால் சுக்கிலம் பெருகும், தீபனம் உண்டாகும். பித்த சுரம் போகும், உடலுக்கு பல முண்டாகும்.

ஆமணக்கு நெய்யால், முறைப்படி குடித்தால் விரோசனமாகும். ஒரு சிறு அளவில் தினமும் குடித்து வந்தால் கண், மூக்கு, செவி, வாயில் உண்டாகும் எரிச்சல் நீங்கி உடல் பொன்னிறமாகும். தாது விருத்தியும் உண்டாகும்.

எள்ளின் நெய்யால் புத்திக்குத் தெளிவும், விழிக்குக் குளிர்ச்சியும், மன மகிழ்ச்சி, தேக புஷ்டி உண்டாகும். நேத்திர நோய், கபால உஷ்ணம் நீங்கும்.

வேம்பின் நெய்யால் கிரந்தி, கரப்பான், சிரங்கு, சுரம் நீங்கும். மேலும் மகா பித்த முண்டாகும்.

முக்கூட்டு நெய் எனப்படும் எள் நெய், பசுவின் நெய், ஆமணக்கு நெய் இம்மூன்றையும் முறையே கூட்டி, காய்ச்சி, தலை ஸ்நானம் செய்துவரின் திரிதோஷங்களால் வரும் சகல ரோகங்களும் நீங்கும்.

(தொடரும்)

அன்பனே!

இறைவன் உன் உள்ளத்தில் எழுந்தருள வேண்டுமானுல் உன் உள்ளம் தூய்மையாக இருக்கவேண்டும்.

குப்பைநிறைந்த இடத்தில் நீ இருக்க அருவருப்புக்கொள்வாயன்றோ?

அதுபோல் காமம், கோபம், வஞ்சனை,சூது, புலை, கொலை, பொய் முதலிய அசுத்தங்கள் நிறைந்த உள்ளத்தில் இறைவன் இருக்கமாட்டான்.

ஆனபடியால், சாந்தமாகிய பசுவின் சாணத்தால் மெழுகி, அன்பு என்ற சந்தனந் தெளித்து, அறிவு என்ற விளக்கேற்றி, உண்மை என்ற தூபம் கமழ வை; இறைவன் எழுந்தருளுவான்.

—திருமுருக கிருபானந்தவாரியார்.

# பக்தர் சொல்கேட்ட பரம்பொருள்

"நான் மறைகள் தேடியென்றும் காணமாட்டாச் செல்வன்" என்று பரம்பொருளான நாராயணனை ஆழ்வார்கள் கூறுவர். ஆழ்வார்கள் பரம்பொருள் அனுபவத்தில் ஆழ்ந்து நின்றவர்கள். அவ்வாறு ஆழ்ந்ததினால் எம்பெருமானை 'திருக்கண்டேன்' என்று தத்தம் கண்களினால் ஆரக் கண்டு களிப்பெய்தி அதை இவ்வுலகோர்க்கு உரைத்தவர்கள். அவ்வாழ்வார்களின் ஆத்மானுபவத்தை ஞானத்தால் நன்குணர்ந்து நானிலத்து மக்கள்முன் வைத்தார்கள் ஆச்சாரியர்கள். இவர்களுடைய வாழ்க்கையின் பல கோணங்களை எடுத்தியம்பும் நூலே 'குருபரம்பரை' எனப்படும். இவ்வரிய நூலில் வைணவ சமயத்தின் ஆணிவேர்களான ஆழ்வார்கள், பரந்து விளங்குகின்ற கிளைகளான ஆசார்ய ஸார்வபௌமர்கள் ஆகியோரது வாழ்க்கையில் நடந்த சுவையான அதேசமயம் சிந்தையால் நினைந்து சொல்லால் மொழிந்து செய்கையால் செய்ய வேண்டுவதான கதைகள் பல கொழுகொம்புடன் இணைந்துபடரும் கொடி போன்று பின்னிப் படர்ந்திருக்கக் காணலாம். அவற்றுள் 'பக்திஸாரர்' என்று போற்றப்பெறும் திருமழிசையாழ்வார் சரித்திரத்தில் இணைந்துறையும் கணிகண்ணன் கதையை சிறிது அநுபவிப்போம்.

"உலகுமழிசையுமுள்ளுணர்ந்து தம்மில்
புலவர் புகழ்க்கோலால் தூக்க— உலகுதன்னை
வைத்தெடுத்த பக்கத்தும் மாநீர் மழிசையே
வைத்தெடுத்த பக்கம் வலிது"

என்று புகழ்ந்து கூறப்படும் திருமழிசையில் ரிஷிகளில் உயர்ந்தவரான பார்க்கவ மஹரிஷிக்கும், கனகாங்கி என்னும் தேவலோகத்து மங்கைக்கும் சுதர்சனாம்சராய் திருமழிசையாழ்வார் அவதரித்தார். இவருடைய திவ்ய தேஜஸ்ஸினால் ஈர்க்கப்பட்ட ஒரு தம்பதிகள் இவருக்கு தினமும் பாலமுது கொடுத்து வந்தார்கள். அவர்களுக்கோ மகப்பேறு இல்லை. ஆழ்வார் இதை எண்ணி அவர்களுக்கு அருள்செய்யும்வண்ணம் ஒருநாள் தான் அமுது செய்த பால் அடிசிலில் சிறிது விட்டு வைத்தார். அவர்களும் அதை மிகவும் பக்தியோடு உண்டனர். அதன் பலனாய் அவர்களுக்கு ஒரு மைந்தன் பிறந்தான். அவனுக்கு "கணிகண்ணன்" என்று பெயரிட்டனர். அவனும் சிறந்த ஞானியாய் விளங்கலானான்.

இவ்வண்ணமிருக்கையில் திருமழிசையாழ்வார் 'சாக்கியம் கற்றோம் சமணம் கற்றோம்' என்று பற்பல சமயங்களில் புக்குப் புறப்பட்டு இறுதியில் பேயாழ்வாரால் திருத்திப் பணிகொள்ளப்பட்டு வைணவ சமயத்தில் ஆழ்ந்தாராகி 'முக்தி தரும் நகரேழில்' முக்கியமானதும் 'நகரேஷு காஞ்சி' என்று கவி காளிதாஸனால் வர்ணிக்கப்பட்டதுமான கல்வியிற்கரையிலா காஞ்சி மாநகரில் யோகத்தில் இருந்தார்.

இப்போது கணிகண்ணன் அவரை அடிபணிந்தான். அவருக்கு ஒழிவில் காலமெல்லாம் உடனாய் வழுவிலா அடிமைசெய்து கொண்டிருந்தான். காஞ்சியில் வாழும் ஒருத்தியும் இது போல் ஆழ்வாரின் உறைவிடத்தை எம்பெருமான் உறைவிடமாகப் பாவித்து அதனைச் சுத்தம், செய்தல் கோலமிடல் போன்ற பணிகளைச் செய்து வந்தாள்.

யோகம் நீங்கிய ஆழ்வார் தாமும் ஒருநாள் அவளைநோக்கி 'உன் கைங்கர்யங்களினால் நாம் மிகவும் சந்தோஷம் கொண்டோம். உன் இஷ்டமான பொருள்களைக் கேள் தருகிறோம்" என்று திருவாய் மலர்ந்தருளினார். அவளும் பெண் ஆதலின் தன் வயோதிகம் போய் மீளவும் தான் இளமைக் கோலத்துடன் பலகாலும் விளங்கிட வேண்டும் என்ற தன் விருப்பத்தைத் தெரிவித்தாள். ஆழ்வாரும் அவ்வாறே அவளுக்கு அருள் செய்தார். உடன் அவளும் ஒரு பேரழகியாய் மாறி ஆழ்வாரை பலவாறு வணங்கிப் போந்தாள்.

அவளுடைய அழகில் மயங்கிய பல்லவராயன் எனும் அரசன் அவளை மணந்துகொண்டு, வாழ்க்கையில் தான் நாளுக்கு நாள் வாடி சோர்ந்து உடலம் தளர்ந்து போக அவன் மனைவியான அவளோ அன்றிருந்த அதே அழகுடன் விளங்கக்கண்டு அதிசயமடைந்தான். இந்த ரகசியத்தைப் பற்றி அரசன் அவளை வினவுகையில் அவளும் ஆழ்வார் அருளால் தனக்கேற்பட்டது இந்த இளமை என்று உரைத்தாள்.

கூரம் ஸ்ரீவத்ஸ கே. வரதராஜன்,
சென்னை.

அரசனும் விவரமறிந்து அரசவைக்கு வரும் கணிகண்ணனிடம், 'நான் உம் குருவான பக்திஸாரரை வணங்க விருப்பமுடையவனாயிருக்கிறேன். அவரை நம் மாளிகைக்கு அழைத்து வரவேண்டும்' என்றான். கணிகண்ணன், "எம் குரு ஒன்றும் சாமான்யரல்ல, அவர் பெரிய யோகி. எவருடைய இடத்திற்கும் அவர் வருபவர் அல்லர். 'நாக்கொண்டு மானிடம் பாடேன்' என்று எவரையும் வாழ்த்திப்பாடி வயிறு வளர்ப்பவரும் அல்லர்' என்று உரைத்தான்.

இதைக்கேட்ட அரசன் மிகவும் கோபம் கொண்டான். அவன் மனைவி எவ்வளவு இதம் சொல்லியும் கேட்க மறுத்தான். எவ்வாறேனும் ஆழ்வார் தன்னை வாழ்த்திப் தனக்கு என்றும் மாறா இளமையைத் தரச் செய்தல் வேண்டும் என்று கணிக்கண்ணனிடம் கட்டாயப்படுத்தினான். கணிகண்ணனோ முற்றாக மறுத்துவிட்டான்.

கடுங்கோபம் கொண்ட அவ்வரசன் அவனை நாடு கடத்த உத்தரவு பிறப்பித்தான். ஆழ்வாரிடத்தில் இதைத் தெரிவித்த கணிகண்ணன் கலங்கி நின்றான். ஆனால் ஆழ்வாரோ சற்றும் கலங்கவில்லை. "கணிகண்ணா! நானும் உன்னுடனே புறப்படுகிறேன். நாம் இங்கிருந்து புறப்பட்டோமென்றால் எம்பெருமானுக்கும் இங்கு வேலை இல்லை. அவரையும் நம்முடன் அழைத்துச் செல்வோம்" என்று மறுமொழி கூறினார்.

அவர்கள் வாழ்ந்து வந்த காஞ்சி புரத்தின் ஒரு பகுதி வெஃகா என்று வழங்கப்படுவது. அந்த திவ்ய தேசத்து எம்பெருமான் 'யதோக்த காரி' என்று அழைக்கப்படுபவன். ஆழ்வார் பெருமாளை நோக்கி,

''கணிகண்ணன் போகின்றான் காமரு
பூங்கச்சி
மணிவண்ணா நீ கிடக்கவேண்டா—
துணிவுடைய
செந்நாப்புலவன் யானும் போகின்
றேன் நீயுமுன்றன்
பைந்நாகப்பாய் சுருட்டிக் கொள்''

என்று விண்ணப்பம் செய்தார். என்னே அதிசயம்! பெருமாள் தன் பாம்பு படுக்கையை சுருட்டி எடுத்து கொண்டு ஆழ்வாருடன் புறப்பட்டான். மூவருமாக ஊரைவிட்டு அகன்று சென்றார்கள். பெருமாள் இல்லாத ஊர் பொலிவிழந்தது. இருள்மண்டியது. காஞ்சிமாநகரத்தில் தாவரங்கள் வாடின: தாடகங்களில் நீர் வற்றி வரட்சியுண்டன. ஆலயங்களில் தேவதைகளின்றி 'நீளிரவாய் நீண்டதா' என்றவாறே உதயமும் அஸ்தமனமும் தெரியாத நிலை வந்துற்றது.

அரசனும் அமைச்சர்களும் கலக்கம் மிகக் கொண்டனர். பெருமாளையும் ஆழ்வாரையும் பின்தொடர்ந்து சென்றனர். 'ஓரிரவிருக்கை' என்னும் கிராமத்தில் ஆழ்வாரையும் பெருமாளையும் கண்டனர். அரசன தன தவறை உணர்ந்து ஆழ்வாரை அடி பணிந்தான். ஆழ்வாரைப் பலவாறு ஏத்தினான். ஆழ்வார் அடியவளான அவன் மனைவியும், அமைச்சர்களும் ஆழ்வாரை பலவாறு இறைஞ்சி மீளவும் காஞ்சிக்கு வரவேண்டினர். திருமழிசையாழ்வாரும் மனமிரங்கி அவர்களுக்கு அருள் செய்ய எண்ணினார். பெருமாளைப் பார்த்து,

''கணிகண்ணன் போக்கொழிந்தான்
காமருபூங்கச்சி
மணிவண்ணா நீ கிடக்க வேண்டும்—
துணிவுடைய
செந்நாப்புலவன் யானும் போக்
கொழிந்தேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய் படுத்துக்கொள்''

என்று விண்ணப்பம் செய்தார்.

பக்தர்களுக்கு எளியவனன்றோ பரம்பொருள். ஆழ்வார் சொல்லை தட்டாமல் ஏற்றான். அவர் சொன்ன வண்ணமே மீண்டும் வெஃகாவுக்கு எழுந்தருளி அரவத்தணையில் கண் துயிலும் சேவை தந்தான். பக்தர் சொல்கேட்ட பரம்பொருள் மீண்டும் வந்ததும் காஞ்சியும் முன்போல் எழிற்கோலம் பூண்டது.

ஆழ்வாரும் பெருமாளின் எளிமையைக்கண்டு வெள்ளத்தரவில் துயில் கொண்ட வேதமுதல்வனை பாடிப் பரவி பலகாலம் காஞ்சியில் யோகத்தில் எழுந்தருளியிருந்து தன்னை யடைந்தவர்க்கு எல்லாம் அருள் செய்திருந்தார்.

திருமழிசைப்பிரான் திருவடிகளே
சரணம்

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

தோலைப் பூமாதேவி கொடுத்தாள். வானுலகம் அழகிய குடையை வழங்கியது. சந்திரன் தண்டு ஒன்றைத் தந்தான். தந்தை அரைஞான் அணிவித்தார். காயத்திரி மந்திரத்தைச் சூரியன் மெல்லவுரைத்தான். பொன்னுலாகிய பிச்சைப் பாத்திரத்தைக் குபேரன் கொடுத்தான். அப்பாத்திரத்தில் உமாதேவியார் முதன் முதலாக அன்னமிட்டார். இவ்வாறு வாமனருக்கு உபநயனச் சடங்கு மிகவும் சிறப்பாக நடந்தேறியது. பிரமசரிய நிலையடைந்த வாமனர் பிச்சையேற்கும் பொருட்டு வெளியே புறப்படலானர்.

நலம் பல நல்கும் நருமதை நதிக் கரையில் மகாபலி யாகம் புரிந்து கொண்டிருந்தான். அவ்விடத்தை நோக்கி வாமனர் நடக்கலானர். யாகசாலையை அடைந்தோர்க்கெல்லாம் பொன்னையும் பொருளையும் ஈந்து தன் வள்ளல் தன்மையைப் பறை சாற்றிக் கொண்டிருந்தான் மாவலி. விண்ணவர், மண்ணவர் அனைவரினும் மேம்பட்டு விளங்க வேண்டும் என்ற தன் முனைப்பு மாவலியின் செய்கையில் காணப்பட்டது. தேவர்கள் தங்கள் ஆட்சியை மீண்டும் பெறவும், மாவலியின் தற்பெருமை அடங்கவும் வாமனமூர்த்தி மாவலியின் யாகசாலையை அடைந்தார்.

வாமனரின் ஒளிமிக்க வடிவத்தைக் கண்டதும் மாவலி தன்னையே மறந்தான். வாமனரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினன். அருந்தவத்தோராககாணப்படும் வாமனருக்குச் செய்யவேண்டிய உபசாரங்களையெல்லாம் செய்து முடித்தான். பின் வாமனரை வணங்கிக் கூறலானன்.

மாவலி: பெரியீர்! நான் புரியும் யாகத்துக்குத் தாங்கள் வருகை புரிந்தது யான் செய்த தவத்தின் பயனாகும். நான் செய்து கொண்டிருக்கும் வேள்விக்கு வருகை தருவோர்க்கெல்லாம் வேண்டுவனவற்றை வேண்டியவாறே வழங்கி வருகிறேன். ஐயனே! தங்கட்குத் தேவையானது யாதாயினும் ஈகுவேன். தங்காது கேட்க வேண்டுகிறேன்.

வாமனர்: வேள்வி பல இயற்றும் வேந்தே! உன்குல குருவாகிய சுக்கிராசாரியாரின் அருளோடு கூடி நீ புரியும் தானதருமங்களைப் பற்றிக் கேள்விப்பட்டே வந்தேன். சொன்ன சொல் தவருதவன் என்று எல்லோரும் உன்னைப் புகழ்ந்து பாராட்டுகின்றனர். வள்ளல் தன்மையில் நிகரற்றவன் நீ என்று இவ்வையகமே உன்னைப் பாராட்டுகிறது. பிரகலாதன் குலத்தில் பிறந்து சிறந்த உன் பெருமையினை யாரே விரித்துக் கூற முடியும்? வேதியர் வடிவமெடுத்து வந்து யாசித்த தேவர்களுக்கு உன் தந்தை விரோசனன் தன் உயிரையே கொடுத்ததை இந்த உலகம் அறியுமே! உயிரையே தந்த விரோசனின் மைந்தன் அல்லவோ நீ! உன் கொடைத் தன்மையைப் புகழ்ந்து கூற யாரால் முடியும்! சீரும் செல்வமும் பேராற்றலும் படைத்த உன் பெருமையைப் பேசுதற்குச் சொற்களும் உளவோ? வள்ளலே! யான் உன்னிடம் யாசிப்பது மூன்றடி மண் மட்டுமே!

மாவலி: அருந்தவத்தீர்! கேவலம் மூன்றடிமண் கேட்கவா என்னிடம் வந்தீர்? உம் யாசகம் விந்தையாக இருக்கிறதே!

வாமன: மகாபலி! ஆசைக்கு ஓர் அளவு உண்டோ? பெற்றதைக் கொண்டு மனநிறைவு கொள்பவரே பெருமகிழ்ச்சியை அடைவர். பேராசை கொள்பவர் தம் சுற்றத்தோடு தாமும் கெடுவர். ஆசை என்பது மேலும்மேலும் மூண்டெழும் நெருப்புப் போன்றது. ஆசையாகிய நெருப்பை அணைப்பவரே அந்தணராவர். எனவே, இதனை நன்கு ஆராய்ந்து பார்! எனக்கு மூன்றடி மண் மட்டுமே போதும். அதனையும் என் சிறிய காலடியாலேயே அளந்து கொள்கிறேன்!

மாவலி; காமமகற்றிய தூயவரே கருத்து நிறைந்த உம் சொற்களைக் கேட்டு உள்ளம் உவகைகொள்கிறது. நீர் விரும்பிய மூன்றடி நிலத்தைத் தருகிறேன். நீரே அளந்து கொள்ளும், பெற்றுக் கொள்வீராக!

மகாபலி வாமனருக்கு மூன்றடி நிலத்தைக் கொடுக்க முனையும்போது மகாபலியின் குலகுருவாகிய வெள்ளி பகவான் சில சொற்களைக்கூறலானர்.

“மாகபலி! யாசிக்க வந்திருப்பது யாரெனத் தெரியுமா? திருமகள் கேள்வனுகிய திருமால்! காசிப முனிவரின் மகனுகப் பிறந்து குறள் வடிவோடு உன்னைக் காண வந்துள்ளார். உன்னிடம் அவர் கேட்பது மூன்றடி நிலம் மட்டுமே! ஆனல், அவர் யாசகத்தில் உள்ள வஞ்சனையை நீ அறியமாட்டாய்! ஓரடியால் இந்த உலகத்தை அளப்பார்! மற்றோரடியால் உன்னுட்சிக்குட்பட்ட விண்ணுலகை யளப்பார்! மூன்ருமடிக்கு எந்த நிலத்தைக் கொடுப்பாய்! உன்னிடம் யாசித்துப் பெறப் போகும் விண்ணுலகத்தை இந்திரனுக்களிக்கவே இந்த நய வஞ்சக நாடகம்! நீ கொடுக்கப் போவது கொடையன்று. உன்னையும் உன் குலத்தாரையும், உன்னைச் சூழ்ந்துள்ளோரையும் கெடுத்துக் கொள்ளச் செய்யும் கொடுஞ் செயல்! செல்வங்களனைத்தையும் ஒருவருக்கே ஈவது அறமாகாது! பலருக்கும் பகிர்ந்தளிப்பதே பண்பான அறமாகும். வஞ்சகத்தை வஞ்சத்தால் தான் வெல்லமுடியும். எனவே, வாக்குக் கொடுத்து விட்டோமென்று தயங்காதே! குற்றமற்ற நன்மையைத் தருமேயானல், பொய்மையும் வாய்மையே என்பதை நீ அறியமாட்டாயா? பொய்யான வடிவத்தோடு வந்து யாசிப்போரிடம் பொய்யாக

நடந்து கொள்வதில் தவறேதும் இல்லை. வந்திருப்பவர் அந்தணர் அல்லர். வையகமுண்ட திருமாலே யென்பதை அறிந்து கொள்!''

வெள்ளி விளம்பியதைக் கேட்டு மகாபலி கூறலுற்றான்.

''அறமுரைக்கும் ஆசிரியரே! 'கொடுப்பது நன்று. கொள்வது தீது' என்று கூறியவரே தாங்கள் தானே! அறம் செய்வதால் அருநரகே கிட்டு மெனினும், அறத்தைச் செய்தலே அரசனுக்கு அழகாகும். மேலும், வந்துள்ளவர் திருமால் என்கிறீர்! அவருக்கு நான் தருமம் செய்யும் போது அவர் கை கீழே இருக்கும். என் கை மேலோங்கி இருக்கும். இதனினும் நான் பெறக்கூடிய பேறு வேறு உண்டோ? எனவே, நான் சொன்ன சொல்லை என்னால் மாற்ற முடியாது.''

இவ்வாறு கூறிக்கொண்டே மாவலி வாமனருக்கு மூன்றடி நிலத்தைத் தாரை வார்த்துக்கொடுக்கத் தலைப்பட்டான். மகாபலியின் மனைவியின் பெயர் விந்தியாவலி. விந்தியாவலி கமண்டலத்திலிருந்து நீரைச் சாய்த்தாள். ஆனால், கமண்டலத்திலிருந்து நீர் ஒழுகவில்லை.

தாரை வார்த்துக் கொடுக்காத வண்ணம் வண்டுருவம் தாங்கிச் சுக்கிராச்சாரியார் கமண்டலத்தின் துவாரத்தை அடைத்துக் கொண்டார். இதை அறிந்து கொண்ட வாமனர் கமண்டலத்தின் துவாரத்தின் உள்ளே சிறு குச்சியைச் செலுத்தினார். குச்சியால் குத்தவே, சுக்கிராச்சாரியாரின் கண் ஒன்று புண்ணாகியது. வலி தாங்க முடியாமல், வண்டு கமண்டலத்தின் தொளையிலிருந்தும் வெளிப்பட்டது. அன்று முதல், சுக்கிராச்சாரியாரின் கண் ஒன்று குருடானது. கொடுத்ததைத் தடுத்தால் வந்த வினை இது!

பின்னர், மாவலி தாரைவார்த்துத் தானம் செய்தான். அவ்வளவில், குறள்வடிவான திருமால் விண்முட்டும் அளவு உயர்ந்து நெடுமால் ஆனார். ஓங்கி உயர்ந்த உத்தமனின் உருவத்தைக் கண்ணாரக் கண்டு உவந்தான் மாவலி. தேவர்கள் பூமாரி சொரிந்தனர். திருமாலின் திருவடிகளில் தன் கமண்டலத்திலிருந்த நன்னீரைப் பிரமதேவர் சொரிந்தார். திருமாலின் திருவடிகளில் படிந்த நீர் கங்கை நதி என்ற பெயர் கொண்டு மூன்று உலகங்களிலும் சென்று பரவியது.

''வஞ்சனை செய்து விட்டான் திருமால்!'' என்று அரக்கர்கள் சீறியெழுந்தனர். திருமாலை எதிர்க்கப் புறப்பட்ட அரக்கர்களை மாவலி சமாதானப் படுத்தலானான்.

''தேவர்களை இது வரை நாம் அடக்கி ஆண்டு வந்தோம். இன்று வரை நம்முடைய காலம் நல்ல காலமாக இருந்தது. இப்பொழுது முதல் அந்த நல்லகாலம் தேவர்களுக்குக் சாதகமாகச் செல்லத் தொடங்குகிறது. வாழ்வு சிலகாலம்! தாழ்வு சிலகாலம்! என்பதை நாம் உணரும் காலம் வந்துவிட்டது. முப்பதாண்டுகள் வாழ்ந்தவரும் இல்லை! முப்பதாண்டுகள் தாழ்ந்தவரும் இல்லை. இது வரை நாம் தேவர்களை அடக்கி ஆண்டு வந்தோம். இனி, தேவர்களுக்கு நாம் அடங்கி வாழ வேண்டியது நியாயம்தானே!'' இவ்வாறு மாவலி கூறிய சொற்களைக் கேட்டு அசுரர்கள் அடங்கிப் போயினர். திருமாலின் திரு அவதார வடிவைக் கண்டவுடனே மாவலியின் வாய்ச் சொற்கள் எவ்வளவு தூய்மையாக வெளிப்படுகின்றன!

நெடுமால் ஓரடியால் மண்ணுலகை அளந்தார். மற்றோரடியால் விண்ணுலகை அளந்தார். ''மூன்றாமடிக்கு நிலம் எங்கே?'' என்று திருமால் மாவலியைக் கேட்டார். மாவலி செய்வதறியாது மயங்கினான். எனவே, வருணபாசத்தால் மாவலியைக் கட்டிவிட்டார் திருமால்! இதை அறிந்த பிரகலாதாழ்வார் திருமாலின் திருவடிகளை மன முருகித் துதித்தார்.

''பிரகலாதா! அஞ்சவேண்டா! பாட்டனாகிய உனது பாதங்களை நாள் தோறும் வணங்கி வருபவன் மாவலி. நீயோ எனது அன்பன்! எனவே, உன்பேரனாகிய மாவலிக்கு எந்நாளும் இன்பமே யன்றித்துன்பம் ஒருநாளும் வராது!'' எனக்கூறித் திருமால் பிரகலாதனுக்காக மாவலியின் வருணபாசத்தை நீக்கியருளினார்.

வருணபாசம் நீங்கப் பெற்ற மாவலி திருவடிகளை வணங்கினான். ''ஐயனே! என்வாக்கு பொய்த்தல் கூடாது, எனவே, மூன்றாமடி நிலமாக என்சிரசினை அளந்து கொண்டு அருள்புரிய வேண்டுகிறேன்!'' என்று வேண்டினான்.

வாமனரும் மாவலியின் திருமுடி மீது தன் திருவடியைப் பதித்தருளினார். ''மாவலி! கீழேயுள்ள மூன்றும் உலகமாகிய சுதலலோகத்தை ஆண்டு வரும் உரிமையை உனக்கு அளிக்கிறேன். உன் அரண்மனை வாயிலைக் காப்போனாக யாமே இருந்து உனக்கு அருள்புரிவோம். உரியகாலத்தில் உனக்கு இந்திர பதவியை அளிப்போம்! பின்னர், எட்டாம் மனுக் காலத்தில் அரசாட்சியும் அளிப்போம்!'' என்று அருள்புரிந்தார்.

மகாபலி சுதலலோகத்து மன்னனானான். பிரகலாதாழ்வார் வாமனரை வணங்கி வாழ்த்துக்கள் பெற்றார். தேவர்கள் தங்கட்குரிய அரசாட்சியைத் திரும்பவும் பெற்று மகிழ்ந்தனர். மாவலி தொடங்கிய யாகத்தைப் பிருகு முனிவரைக் கொண்டு திருமால் நிறைவு பெறச் செய்தார். சுக்கிரர், பிருகுக்கு உதவியாக இருந்து வந்தார். தேவர்கள் மீண்டும் அரச பதவி பெற்றதைக்கண்டு, தேவர்களின் தாயாகிய அதிதி பெரிதும் அகமகிழ்வு கொண்டாள். வாமனர், உபேந்திரன் என்ற பெயருடன் இந்திரனுக்கு உதவியாக இருந்து அருள் புரிந்தார்.

யாசகம் கேட்கும் வாமனராக அவதரித்த திருமாலின் திருவிளையாடலை என்னென்றியம்புவது? உலகங்களைத் தாங்கி யருளும் உத்தமன் உலகளந்த பெருமாளாகத் திவ்விய தரிசனம் தந்தருளினார். மாவலிக்கு வரங்கள் பல வழங்கிய வாமனரின் திருக்கதையைப் படிப்போர், வாழ்வில் வளமெலாம் பெறுவர் என்பதில் ஐயமும் உண்டோ!.

(தொடரும்)

# தஞ்சாபுரி மாஹாத்மியம்

திரு. பி. சுந்தரராமன், எம். ஏ. பி. எட்.
தஞ்சாவூர்.

மகரிஷிகள் தவப்பயன் பெறுதல், புராண பிரசித்தம் ஆழ்வார்கள், நாயன்மார்களின் மங்களாசாஸனம், ஆசாரியர்கள் உகந்தருள்வது இவை யாவுமே புண்ய ஸ்தலங்களின் பெருமையை மேம்படுத்துவனவாகும். பராசரர் போன்ற மகரிஷிகள் தவப்பயன் பெற்ற இடமாய், நூற்றெட்டு திவ்ய தேசங்களுள் ஒன்ருய், பூதத்தாழ்வார் திருமங்கையாழ்வார் ஆகியோரது மங்களாசாஸனம் வாய்க்கப் பெற்றதாய், ஸ்ரீமந் நிகமாந்த மகா தேசிகன் முதலிய ஆசாரியர்கள் உகந்தருளியிருப்பதால், பிரம்மாண்ட புராணத்தில் சிறப்பு பெற்ற துமாயிருப்பது தஞ்சாபுரி என்னும் தஞ்சைத் திருத்தலமாகும்.

சூர்ய வம்சத்தின் குலகுருவான வசிஷ்டரின் புதல்வன் சக்தி. இவரது புதல்வர் பராசரர். பராசரரின் பிள்ளை வியாஸர். வியாஸரின் மகன் சுகர். இத்தகைய அற்புதமான முனிவர்கள் பரம்பரையில் உதித்த பராசரரின் பெருமையை,

ஸ ஹோவாச வ்யாஸ: பாராசர்ய:

'பராசரர் குமாரன் வியாஸர் சொன்ஞர்' என்றவாறு பராசரர் சம்பந்தத்தையிட்டு வியாஸருக்குள்ள ஏற்றத்தைக் காட்டியது வேதம். இந்தப் பராசர முனிவர் பின்பு ஸ்ரீ விஷ்ணு புராணம் இயற்றிஞர். இதனைப் 'புராண ரத்னம்' என்று ஆளவந்தார் முதலிய பூர்வாசார்யர்கள் வழங்குகிறுர்கள். இத்தகைய பிரபாவமுள்ள பராசர முனிவர் தஞ்சை இருக்கும் இவ்விடத்தில் தவம்புரிந்து வந்தார். தேவாசுரர்கள் பாற்கடலைக் கடைந்து அமுதம் எடுத்தபோது விண்ணுலகு சென்ற பராசர முனிவர்க்கும் அமுதம் கிடைத்தது. அதைத் தாம் மட்டும் உண்ணுமல் உலகத்தவர் அனைவர்க்கும் உதவ வேண்டித் தாம் வசித்த இடத்தில் இருந்த அம்ருத புஷ்கரணியில் சேர்த்தார். அது காரணம் பற்றி உலகமெல்லாம் வரண்டு பஞ்சமடைந்த காலத்தும், அவர் இருக்குமிடம் மட்டும் செழித்து வளர்ந்த பசுஞ் சோலையாக இருந்தது. அந்த புஷ்கரணி நீரை உண்டவர்கள் பசி என்பதை அறியாதவர்களாக நீண்ட வாழ்நாளுடன் உடல் வலிவுடன் வாழ்ந்து வந்தனர்.

தஞ்ஜகோ தண்டகச்சேதி
  தாரகச்சேதி விச்ருதா: |
ப்ருதிவ்யாம் ஸஞ்சரந்தஸ்தே
  க்ஷூத் பிபாஸா ஸமன்விதா: ||

இந்த நேரத்தில் தஞ்சகன், தண்டகன், தாரகன் என்ற பிரசித்தி பெற்ற மூன்றுஅரக்கர்கள் தம் குடும்பத்துடன் இவ்விடத்தின் அருமை பற்றிக் கேள்விப்பட்டுத் தம் பசித்துயரமும் பஞ்சமும் நீங்க இவ்விடமடைந்தனர். கனிகளும், கிழங்குகளும் உண்டு அமிர்த புஷ்கரணி நீரை அருந்தி எல்லையற்ற உடல் வலிவு உண்டாகப் பெற்ற அரக்கர்கள் முனிவர்களைக் கொன்று யாகங்களைக் கெடுக்கலாயினர்.

பராசரமுனிவர் நான்முகனைத் துதித்து அடைக்கலம் கோரிஞர். பிரம்மா பிரசன்னராகிக் கீழ்க்கண்டவாறு கூறிஞர்:

ஸர்வேஷாம் ஸ்ருஷ்டி கர்த்தாரம்
  ந ஹந்தாஹம் கதாசன |
ஸ்வயம் ஸம்வர்த்ய ஸம்ஹர்த்தும்
  நேச்சேயம் தர்ஹி கஞ்சன ||

''நானே எல்லாவற்றிற்கும் ஸ்ருஷ்டிகர்த்தா. நானே அவர்களை சிருஷ்டித்தவன். எனவே நானே கொல்வது தகாது. அதற்கு என்மனமும் இடம்தராது' என்று கூறிய பிரமன், பரமேச்வரனையும், மஹாவிஷ்ணுவையும் சரணமடையும் படி முனிவர்க்கு உபாயம் கூறிப் பிறகு மறைந்தார்.

எனவே பராசரர் சிவபெருமானை மனமுருகி வேண்டவே, சிவபெருமான் சண்டிகா தேவியை அனுப்பி வைத்தார். முனிவரும் தேவிக்குரிய பூஜைகள் செய்து வரவேற்றுத் தம் குறையைக் கூறிஞர். சண்டிகா தேவியும்அசுரர்களையடைந்து உரத்த இடிபோன்ற குரலில் கட்டளையிட்டாள்.

'' தபோவனமிதம் சம்போர்
  நியோகாத் ரக்ஷ்யதே மயா,
தஸ்மாத் கச்ச த்வம் அஸுரா
  யதி ஜீவிதுமிச்சத''

''அரக்கர்களே! இந்த தபோவனத்தை நான் சிவபெருமானின் கட்டளைப்படி காத்துக் கொண்டிருக்கிறேன். உலகத்தில் பிழைத்துக் கொண்டு இருக்கவேண்டும் என்ற எண்ணம் உங்களுக்கு இருக்குமாயின் நீங்கள் இந்த இடத்தை விட்டு ஓடி விடுங்கள்'' என்று சண்டிகாதேவி அதட்டியதைக் கேட்ட அரக்கர்கள் கொஞ்சமும் பயப்படாமல் போரைத் தொடங்கிஞர்கள். ஆனுல் அவர்கள் சற்றும் களைப்படையாதிருக்க அமிர்த புஷ்கரணி நீர் உதவிக் கொண்டே இருந்தது. எனவே முனிவர் மஹா விஷ்ணுவை பிரார்த்திக்க, மஹாவிஷ்ணு கருடன் மீதேறி வந்து அபயமளித்து புஷ்கரணி நீரைக் குடித்து வற்றச் செய்தார். பிறகு சண்டிகா தேவியுடன் போரில் கலந்து கொண்டார். சூரியன் இருட்டைப் போக்குவது போல விளையாட்டா

கவே அரக்கர்களாகிய இருட்டைத் தனது சாரங்கமெனும் ஒளி பொருந்திய வில்லினால் ஸ்ரீமஹாவிஷ்ணு தொலைத் தெறிந்தார். திருமாலுக்கும், தஞ்சகனுக்கும் கடுமையான போர் நடைபெற்றது. தஞ்சகன் யானை வடிவம் எடுத்துப் போர் செய்யவே, திருமால் முன்பு இரண்ய கசிபுவை வதைத்த தனது நரசிங்கத் திருவுருவை எடுத்து யுத்தம் செய்தார். முடிவில் அவனைத்தன் மடியில் இருத்தி அவன் மார்பைப் பிளந்து அந்த நரசிங்கம் அத்தஞ்சகனைக் கொல்ல முற்படுகையில் அவன் ஒரு வரம் கேட்டான்:

கிஞ்சேயம் நகரீ புண்யா
ப்ரதிதா லோகபாவனீ,
தஞ்சாபுரீதி பகவன்
ப்ரதிதாஸ்து மமாக்யயா.

"இந்த நகரம் புண்யமாகவும் பிரசித்தி உள்ளதாகவும், மக்களைக் பரிசுத்தப்படுத்துவதாகவும், என் பெயரைக் கொண்டு 'தஞ்சாபுரி' என்று வழங்கி வருவதாகவும் அருள் செய்வீர்" என்று கோரிய தஞ்சகனுக்கு அவன் விருப்பத்தை நிறைவேற்றுவதாக வாக்களித்துப் பின்பு அவனைத் திருமால் பிளந்து கொன்றார்.

தஞ்சகன் இவ்விதம் கொல்லப் படுவதைக் கண்ணுற்ற தண்டகன் பூமியைப் பிளந்து கொண்டு மேற்கே சில யோஜனை தூரம் ஓடினான். திருமாலும் வராஹ உருவமெடுத்து பூமியைக் குடைந்து கொண்டு அவனைப் பின்பற்றி வழிமறித்துக் கொன்றார்.

ப்ரதிச்ருத வரஸ்தஸ்மை
வத காலே ஸுரத்விஷ :
ஸ்ரீமத்வராஹரூபேண
தத்ராஸ்தே தத்வதஸ்தவே.

தண்டகாசுரனைக் கொல்கையில் அவன் வேண்டியபடி வராக மூர்த்தியாய் திருமால் அங்கே எழுந்தருளியுள்ளார். (இந்த இடம் வரகூர் என்றழைக்கப்படுகிறது. இது தஞ்சைதிருக்காட்டுப்பள்ளி சாலையில் உள்ளது. தீர்த்த நாராயணர் கிருஷ்ணலீலா தரங்கம் பாடியது இங்கு தான். அவரது பாடல் ஒவ்வொன்றையும் திரைமறைவில் தன் காற் சலங்கையினை ஒலிக்கச் செய்து ஆமோதித்தவர் இந்தப் பெருமாள். இது திருப்பதிக்கு ஸமமான திருத் தலமென்று கருதப்படும் எழில் கொஞ்சும் சிற்றூர்.)

இதே நேரத்தில் சண்டிகாதேவியும் தாரகனைக் கொன்று அருளினாள். மஹாவிஷ்ணுவால் 'ஏகவீரை' என்று புகழப்பட்டாள். தஞ்சையின் எல்லையைக் காக்கும் அதிஷ்டான தேவதையாக பிரதிஷ்டிக்கப்பட்டு இன்றும் தஞ்சை கரந்தையை அடுத்து, சாலை ஓரத்தில் 'கோடியம்மன்' என்ற பெயருடன் இந்த அருள்மிகு அன்னை விளங்கி வருகிறாள். நரசிம்ம வடிவத்துடன் வெண்ணாற்றங்கரையில் பெருமாள் மேலசிங்கப் பெருமாள் கோயிலில் திருவீற்றிருக்கிறார். இக்கோயில் முதலில் தஞ்சை மேல வெளித்தோட்டத்தில் இருந்ததற்கு ஆதாரமாக சிங்கப் பெருமாள் குளம் இன்றும் அங்கு உள்ளது. பிறகு இக்கோயில் இங்கிருந்து வெண்ணாற்றங்கரைக்குப் பெயர்த்தெடுத்துப் போய் நிர்மாணிக்கப் பெற்றிருக்கிறது. இதே போல் வெண்ணாற்றங்கரையில் உள்ள மணிபர்வதப் பெருமாள் கோயிலும் முதலில் களிமேடு கிராமத்தில் இருந்து, பிறகு இங்கு பெயர்க்கப்பட்டதற்கான ஆதாரம் உள்ளது. இதே வெண்ணாற்றங்கரை நீலமேகப் பெருமாள் கோயிலில் பெருமாள் திருவடிகளின்கீழ் தஞ்சகன் அபயக்கோலமாக விழுந்திருப்பது காண வேண்டிய காட்சியாகும். பூதத்தாழ்வார்,

" தமருள்ளம் தஞ்சை தலையரங்கம
தண்கால்
தமருள்ளும் தண்பொருப்புவேலை
தமருள்ளும்
மாமல்லை கோவல் மதிட்குடந்தை
யென்பரே
ஏவல்ல எந்தைக்கிடம்"

என்றவாறு கூறுவதன்மூலம் "ஆச்ரிதர்காக ஸர்வேசுவரன் எழுந்தருளுவது அவர்கள் இதயத்திலும், தஞ்சை முதலிய தலங்களிலும் மட்டுமே" என்ற கருத்தைப் பெற வைக்கிறார். இப்பாசுரத்தில் தஞ்சையைப் பிற விடங்களைவிட முற்படக் கூறியிருத்தலால் மற்ற தலங்களைவிடத் தஞ்சையின் தனிப்பெருமை அறியற்பாலது.

திருப்பணித் திருடன் திருமங்கை மன்னனும், "வம்புலாஞ் சோலை மாமதிள் தஞ்சை மாமணிக்கோயில்" என்றும்,

" தஞ்சைக்கோயில் தவநெறிக்கு ஒரு
நெறி"

என்றும் பல படியாகத் தஞ்சையை சிறப்பிப்பார்.

இவ்விதம் முற்காலத்தில் வடவாற்றிற்குத் தென்புறம் எழுந்தருளியிருந்த நரசிங்க, நீலமேக, மணிக் குன்றப் பெருமாள் மூவரும் நாய்க்கராட்சியின் பிற்பகுதியிலேயே விண்ணாற்றங்கரையில் ஸ்தாபிக்கப் பெற்றன; இந்த விண்ணாறு கல்லணையில் காவிரியினின்று பிரிவது. இதனை விண்ணன் என்ற வேளாளகுலத்து சிற்றரசன் வெட்டியதாக சோழ மண்டல சதகம் (90) குறிப்பிடுகிறது.

"கண்ணார் உலகில் பகிரதனும் கண்டு
கொணர்ந்தான் கங்கை என்பார்
விண்ணாறு எளிதோ ஆறுதந்த
வேளாண்குரிசில்விண்ணன் அன்றோ"

என்ற பகுதி இதனை விளக்க வந்தது.

ஆதியில் குபேரன் தேவ சிற்பியான விச்வகர்மாவைக் கொண்டு தென்னாட்டில் அளகாபுரிக் கொப்பாக இத்தஞ்சை நகரை நிர்மாணித்து இதில் தங்கி சிவபிரானைக் குறித்துத் தவமியற்றியதாக சமீவன க்ஷேத்ர மாஹாத்மியம் உரைக்கிறது. தஞ்சகன் வேண்டுகோளுக்கிணங்கித் தஞ்சாபுரி க்ஷேத்ர மாஹாத்மியத்திலும், பவிஷ்யோத்தர புராணத்தில் பிரகதீச்வர மாஹாத்மியத்திலும் காணலாம்.

(36-ம் பக்கம் பார்க்க)

# திருமலை ஒழுகு

ராயனும் ஸ்வப்நத்தைக் கண்டு ஸந்துஷ்டனாய், அப்போதே, எம்பெருமானார் முத்ரா நிர்வாஹகராய், நரஸிம்ஹ மந்த்ர ஜபத்தாலே பகவத் ஸாக்ஷாத்கார முடையவராய், நரஸிம்ஹ ஜீயரென்று ப்ரஸித்தராய், (உள்ள) ஏகாங்கி ஸ்ரீவைஷ்ணவருக்கு, தன்னுடைய சதுரங்க பலங்களையும் கூட்டிப் பல்லக்கையும் கொடுத்து அனுப்புவிக்க, அன்று ராத்ரி மிலேச்சனானவன், தன் ஸ்வப்நத்திலே ஒரு ஸந்யாஸி, நரஸிம்ஹாகாரமாய்ச் சதுரங்க பலங்களோடே வந்து, தன் ஸேனைகளை ஸம்ஹரித்ததாயும், தன் கண்ணிலே ஒரு பாணம் வந்து பட்டதாயும் கண்டு பயப்பட்டுத் தன் பரிஜனங்களோடே ஓடிப்போனான். பின்பு, மிலேச்ச கலஹம் சமித்தது.

ஒரு கால விசேஷத்திலே, ஒட்டியன் கலஹமுண்டாய், அவர்களாலே திருமலைக்குப் பயம்வரும் என்னும் போது, அன்று தொடங்கி ராயன், ஏகாங்கி ஸ்ரீவைஷ்ணவருக்குப் பல்லக்கேறிக் கொண்டு ஸ்வாமி கைங்கர்யங்களைப் பண்ணிக் கொண்டிரும் என்று கட்டளை பண்ணினான். அன்று தொடங்கி ஏகாங்கி பட்டத்திலே இருக்கிற பேர்களிலே ஒருவர் பல்லக்கேறிக் கொண்டு ஸ்வாமி கைங்கர்யங்களைப் பண்ணுவார்கள்.

பின்பொரு கால விசேஷத்திலே ஒட்டியன் கலஹம் ப்ரஸக்தமாய், அவர்களாலே திருமலைக்குப் பயம் வரும் என்னும் ஸமயத்திலே இந்தத் தேசாதிபதியான ஸதாசிவராயன், ஒட்டியன், தேவ வைதிகங்களை அங்கீகரித்தவனாகையாலும், தேவ ப்ராஹ்மண ஹிம்ஸை பண்ணாமல் தேசத்தை ஆக்ரமிக்க வந்தவன் ஆகையாலேயும், அவனோடே யுத்தம் பண்ணவொண்ணாதென்று நிச்சயித்து பூர்வ காலத்திலே மிலேச்ச கலஹம் ப்ரஸக்தமான போது திருவேங்கடமுடையான் ராஜமூல மன்றிக்கே தம்முடைய பக்த ஜனங்களைக் கொண்டே வந்த கலஹத்தைப்போக்கடித்தாரென்கிற ஐதிஹ்யத்தைக் கேட்டவனாகையாலே, அந்தப்படியே இப்போதும் பக்த ஜனங்களாலே பயம் வராதபடி பண்ணுவோமென்று நிச்சயித்து, அந்தக் காலத்திலே திருவேங்கடமுடையான் ஸ்ரீபண்டாரத்துக்குக் கர்த்தாவான கோயில் கேள்வித் திருவேங்கட ஜீயர், ஸகல சாஸ்த்ர ப்ரவர்த்தகராய் ராஜவல்லபராய் இருக்கையாலே, ஏகாங்கி ஸ்ரீவைஷ்ணவர் பல்லக்கை வாங்கித் திருவேங்கட ஜீயருக்குக் கொடுத்து, "தேவரீர், ராஜ கோஷ்டிக்கு ப்ரதிபக்தி ஜனகமாம்படி (தோன்றுமாறு) இருப்பவராகையாலே, இந்தப் பல்லக்கை ஏறிக்கொண்டு ஸ்ரீ வைஷ்ண ஸம்ருத்தியோடே (நிறைவோடே) புறப்பட்டுப் போய், ஒட்டிய தேசாதிபதியான ஜகந்நாத தேவனை ஆசீர்வாதம் பண்ணி, இந்த ஸ்தலத்துக்குப் பயம் வராதபடி பண்ணிக்கொண்டு வாரும்" என்று அனுப்ப, ஜீயரும் அப்படியே பல்லக்கேறிக் கொண்டு போய் ஒட்டியனை ஆசீர்வாதம் பண்ணி, திருவேங்கடமுடையான் வைபவத்தைப் பஹுவாக அருளிச் செய்ய, அவனும் கேட்டுப்ரதிபந்நனாய்த் திருமலையிலே வந்து ஸ்வாமியை ஸேவித்து, ஸ்வாமி மதம் ஸித்திக்கைக்கு ஸ்வாமிக்கொரு வஜ்ரகிரீடமும் பண்ணிச் சாத்துவித்து, க்ருதார்த்தனாய் விஜயம் பண்ணிக்கொண்டு வருகிறவனாகையாலே, திருமலை புண்யக்ஷேத்ரமாகையாலே கோயிலிலே ஒரு ஜயஸ்தம்பத்தையும் ப்ரதிஷ்டை பண்ணி, ஸேது தரிசனம் பண்ணப்போனான்.

முன்பொரு நாளில், பின்பு, ஸதாசிவ ப்ரஹ்மராயனும், ஜீயரைப் பார்த்து, "தேவரீர் கைங்கர்யகாலங்களிலே நரவாஹனாரூடராய் எழுந்தருளக்கடவீர்" என்று கட்டளை பண்ணினான். பின்பொரு நாள், திருவோலக்கத்திலே ஜீயர் சாஸ்த்ர வச்யராகையாலே தமக்கு நரவாஹனம் ஆச்ரம விருத்தம் அன்றோ? ஆகையால் த்யாஜ்யம் (தவிர்க்கத் தக்கது) என்றெண்ணிக்கொண்டிருக்க, அப்போது அர்ச்சகரும் பரவசகாத்ரராய், ஜீயரைப் பார்த்து,

வாஹநஸ்தயதிঃ சீக்ரம் பதத்யேவ ந ஸம்சயঃ!

என்று சொன்ன பகவான் தானே,

மந்நிமித்தக்ருதம் பாபம் சாபி தர்மாய கல்பதே|
மாமநாத்ருத்ய தர்மோऽபி பாபம் ஸ்யாத் மத்ப்ரபாவதঃ||

என்று சொன்ன வார்த்தை பக்தர்களுக்கு உபாதேய தமமான (மிகவும் ஏற்றுக் கொள்ளத் தக்கதான) அர்த்தத்தைக் காட்டுகையாலே, பகவத் கைங்கர்ய நிர்வாஹ காலங்களிலே வாஹனஸ்தராயிருந்து ஸ்வாமி கைங்கர்யங்களைப் பண்ணும் என்று நியமித்தார். பூர்வ காலத்திலும் வேங்கடத்தரி நியமன முண்டாகையாலே, அன்று தொடங்கிப் பட்டத்திலே யிருக்கிற ஜீயர்கள் கைங்கர்ய நிர்வாஹ காலங்களிலே வாஹனஸ்தராய் இருப்பார்கள்.

திருப்பதியிலே சூடிக்கொடுத்த நாய்ச்சியார் திருவாடிப் பூரத்திலே கூடல் விளைக்கிற ஸம்ப்ரதாயம்:—

ஸ்ரீ வேதவ்யாஸ பகவான் சிஷ்யராய்க் காலத்ரய தர்ம த்ரஷ்டாவான (முக்கால தருமங்களையும் அறிந்தவரான) ஸூத மஹாமுனியானவர், ஸ்ரீ வராஹ புராணத்திலே வேங்கடாசல மாஹாத்ம்யத்திலே அஷ்டோத்தரசத நாமாத்யாயத்திலே, 'கோவிந்தாய நமஸ்துப்யம், ஸ்ரீநிவாஸாய தே நமঃ' என்று திருவேங்கடமுடையானுக்கும் கோவிந்தராஜனுக்கும் ஐக்யம் தோற்றும்படி

சொல்லுகையாலே, கட்டியம் யாத வராயன் ப்ருதிவி ஸாம்ராஜ்யம் பண்ணும் போது, பாஷ்யகாரர் காலத்திலே தில்லைக் கோவிந்தராஜர், ஒரு காரணாந்தரத்தாலே காவேரீ தீரத்திலே திருச்சித்திரகூட மென்று புராண ஸித்தமான திவ்ய க்ஷேத்ரத்தை விட்டுத் திருமலை அடிவாரத்திலே திருப்பதி என்னும் திவ்ய நகரத்திலே எழுந்தருளி நித்யவாஸம் பண்ணிக்கொண்டு, திருவேங்கடமுடையானுக் கபராவதாரமாய், (மற்றொரு அவதாரமாய்) அநேக சேதனர்களுக்கு த்ருஷ்டா த்ருஷ்ட ஸுக (இன்மை மறுமை இன்பங்களைத் தருபவராய்) ப்ரதராய்த் திருவாராதனம் கொண்டருளும் காலத்திலே ஸ்ரீ பாஷ்யகாரர், கோவிந்த ராஜன் திருவேங்கடமுடையானோடு ஸமஸ்த்தைச்வர்யங்களையும் பேத மின்றிக்கே அநுபவிக்கும் படிக்கு ஸூசகமாம்படி ஆழ்வார் திருமகளான சூடிக்கொடுத்த நாய்ச்சியாரை வாமஹஸ்தத்திலே செங்கழுநீர்ப் புஷ்பத்தைத் தரித்துக் கொண்டிருக்கும்படி செய்து, திவ்யைச்வர்யாபிவ்ருத்தி காரிணியாய் வ்யூஹ லக்ஷ்மிக்கு வேண்டிய யந்த்ர மந்த்ரோத்தாரணாதிகளையும் திவ்ய ஸிம்ஹாஸனத்திலே லிகித்தும் கோவிந்த ராஜனுக்குத் தக்ஷிண பார்சத்திலே வைகாநஸாகம ப்ரகாரத்தாலே திருப்ப்ரதிஷ்டை கொண்டருளப் பண்ணி வைத்தும், ஸமஸ்தோத்ஸவங்களும் கொண்டருளும்படி ஸங்கல்பித்து, பின்பு, ஆழ்வார் திருமகளும் தானும்,

பாண்ட்யதேசே கலேராதௌ
தந்விநவ்யபுரே சுபே।
க்ருஷ்ணாநுபவபூர்த்யர்த்தம் பாமா
பூமௌ ஜநிஷ்யதி ॥

என்று ஹரிவம்சத்திலேயும்,

அயோநிஜா ச துளஸீகாநநே
விச்வதாரிணீ।
ஜநிஷ்யதி கலௌ தேவீ மாநுஷீ
க்ருஷ்ணபக்திதஃ ॥

என்றும் பௌராணிகர் சொன்ன படியே பூமி அம்சமாகத் திருத்துழாய்த் திருநந்த வனத்திலே பூமியிலே திருவவதரித்து,

ஆரப்ய சைசவ மநாரத மச்யுதாங்க்ரி-
பக்த்யா நிரஸ்த விஷயாந்தர
பாவபந்தே।

என்றும்,

"அவரைப் பிராயந் தொடங்கி என்று மாதரித்தெழுந்த வென்தட முலைகள்" என்றும், அருளியதைப் பாஷ்யகாரர் சிந்தித்துச் சூடிக் கொடுத்த நாய்ச்சியார் திருவவதார காலமான திருவாடிப் பூரமான விசேஷ காலத்திலே, சூடிக்கொடுத்த நாய்ச்சியார் கோவிந்தராஜன் சேர்த்தியோடே திருமலை யடிவாரத்தில் அடிப்புளி மண்டபத்திலே ஸ்வயம் வயக்தமான, திருவேங்கடமுடையான் திருவடிகளின் முன்பே எழுந்தருளச் செய்து, திருவேங்கடமுடையான் பஹு தூரத்திலே யிருந்து திருமலை நம்பிக்குப் ப்ரத்யக்ஷமாய் விப்ரக்ருஷ்டராகையாலே, "கோவிந்தன் என்பதோர் பேரெழுதி, வித்தகன் வேங்கட வாணன்" என்றும், "மாதவன் கோவிந்தன் வேங்கடவாணன்" என்றும், "கோவிந்தாய நமோ நித்யம் ஸ்ரீநிவாஸாய தே நமஃ"; என்றும், புராண புருஷரான ஸ்ரீ ஸூத மஹா முனியும் அநுஸந்தித்தும், அவர் தகப்பனாரும், நம்மாழ்வாரும் ஐக்யம் தோற்றும்படியும் அருளிச் செய்கையாலே, திருவேங்கடமுடையானுக்கு அபராவதாரமான கோவிந்தராஜனோடு கூடல் வளைக்கும்படி ஸங்கல்பித்தருள தற்காலத்திலே, மலைகுனிய நின்றாரையர், ஸ்ரீபாஷ்யகாரர் நியமனத்தின் படியே கூடல் வளைப்பர். கூடல் வளைக்கை என்று த்ரமிட சாஸ்த்ரத்திலே விப்ரக்ருஷ்டனைச் (தூரத்துள்ளவனை) சகுனம் பார்க்கை. இது, உபதேச கம்யம் (அறியப்படுவது).

(தொடரும்)

---

(34-ம் பக்கத் தொடர்ச்சி)

பிற்கால சோழ வம்சத்திற்கு அடிகோலிய விஜயாலய சோழன் 9-ம் நூற்றுண்டின் மையப்பகுதியில், பெரும்பிடுகு முத்தரையன் எனும் சிற்றரசன் வசமிருந்த தஞ்சையைக் கைப்பற்றி அழகுறச் சமைத்தான். அவன் பின்னோன் ஆகிய முதலாம் ராஜராஜன் கட்டுவித்த தஞ்சைப் பெருவுடையார் கோவில் தமிழகத்தின் மிக உயரிய சிற்பக்கலைக்கு நிலைக்களனாகி இன்றும் திகழ்ந்து வருகிறது. (அண்மையில் இதன் அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேகம் இரண்டு நூற்றாண்டுகட்குப் பிறகு மிகவும் உயரிய முறையில் நடைபெற்றது) இவ்விதம் தஞ்சையைச் சோழர்கள் 13ம் நூற்றாண்டு வரைத் தம் தலைநகராகக் கொண்டிருந்தனர். பிறகு 14 முதல் 16ம் நூற்றாண்டு வரை தஞ்சை சோபை இழந்திருந்தது. மீண்டும் நாயக்க மன்னர் அரசுரிமை (1549-1673) காலத்தும், அதற்கடுத்த மராட்டிய மன்னர் காலத்தும் (1675-1855) தஞ்சை சிறப்பு அடைந்திருந்தது.

மணி முக்தாநதி என்று புராணங்கள் போற்றுகின்ற வடவாற்றின் கரையில்தான் விஜயராகவ நாயக்கர் காலத்தில் வேங்கட பட்டர் என்ற மாத்வ அந்தணர் முறைப்படி சன்னியாசம் பெற்று ராகவேந்திர சுவாமிகள் ஆனார். இங்கு இவருக்கு ஒரு பிருந்தாவனம் உள்ளது. இங்குள்ள புன்னை நல்லூர் மாரியம்மன் கோயில் சோழர்கள் காலத்திலேயே ஸ்தாபிக்கப்பட்டது என்று "சோழேந்திர விஜயம்" என்ற வடமொழி நூல் கூறுகிறது. மராட்டிய மன்னர்களில் எட்டாவதாய் வந்த துளஜா மன்னனால் ஸத்குரு சதாசிவ பிரம்மேந்திரரைக் கொண்டு இங்கு ஸ்ரீசக்ர பிரதிஷ்டை செய்யப்பட்டதாம். தஞ்சையில் நாதஸ்வரம், நாட்டியம் ஆகிய கலைகள் இன்றும் பல உயரிய கலைஞர்களால் தழைத்து வருகிறது.

அயோத்யாக்யாபுரீ காஞ்சீ-
புரீ தஞ்சாபுரீ ததா
புரீணாம் ச த்ரயம் முக்யம்
ஸ்மரணாத் பாபநாசனம்

என்ற பிரம்மாண்ட புராண வசனத்தில் கூறியபடி, நகரங்களில் அயோத்தி, காஞ்சி, தஞ்சை ஆகியவை மனதால் நினைத்தாலே பாவத்தைப் போக்குவனவாம். தஞ்சையின் கலையழகையும் புராதனச் சிறப்பையும் வாசகர்கள் நேரில் கண்டு இன்பம் எய்துவராகுக!



# வைணவ வினா - விடை

வித்வான் ஸ்ரீ. உ. வே. தஞ்சை - என். எஸ். தாதாசார்யர்.

**1. மதம் என்றால் என்ன?**

வேதம் முதலிய பழைய நூலாதாரங்களைக் கொண்டு, பெரியோர்களால் முடிவு கட்டப் பட்ட கொள்கையாகும். அது "எண்ணம், அறிவு" என்ற கருத்தின் அடிப்படையில் தோன்றிய சொல்லாகும்.

**2. சமயம் என்றால் என்ன?**

மனித இனம் இறைவனை அடைவதற்குரிய நல்ல வழிகளைக் காட்டுவது எதுவோ அது சமயம். சமைதல்—உள்ளப் பக்குவப்படுதல் எனப் பொருள். வேதாந்த நெறியில், அறிவுத்துறையில், வகுக்கப்பட்டதைச் சித்தாந்தம் என்றும், வழிபடும் கடவுள் பெயரால் அமைக்கப்பட்டதை "சமயம்" எனவும் பிரித்துக் கூறலாம். இவ்வழி வைணவ - சமய நூல்களில் பின்பற்றப் பட்டது.

**3. நம் இந்து மதத்தின் சிறப்பு என்ன?**

இம்மதம் ஒரு குறிப்பிட்ட பெரியோரால் தோற்றுவிக்கப்படாதது. அநாதியாக இருந்து வருகிறது. வேதத்தின் நெறிகொண்டு பின் பற்றப்படுவது. அதனால் இது ஒரு "சனாதன மத மாகும்." "சனாதனம்" என்றால் பழமை எனப் பொருள். இதன் பழமையும், சீரிய நெறியுமே இதன் சிறப்புக்குக் காரணம். சனாதனம் என்ற சொல்லுக்கு 'ஸநாதனத்வேபி ஸதா நவத்வாத்' என்ற புதுமை குன்றாத பழைய மதம் எனவும் பொருளாகும்.

**4. இந்து என்ற சொல்லின் பொருளென்ன?**

பிறர் துன்புற்ற காலத்து இரக்கமுள்ளவனே "இந்து" எனப்படுவான் எனச் சிலர் பொருள் கூறினார்கள். புராணங்களில் இச் சொல்லே "ஹிண்டு" என்ற சொல்லால் அழைக்கப்படுவ தாகக் கொண்டு "எவன் என்றும் உலக இயல் களில் பற்றைவிட்டு, எப்பொழுதும் மறுமைப் பாதையில் நாட்டம் கொண்டிருக்கிறானோ அவனே "ஹிண்டு" எனப்படுவன்" என்றும் சிலர் பொருள் உரைத்தனர். நமக்கு 'ஹிந்து' என்பது அன்னியர் கொடுத்தபெயராகும். இந்து மதம் என்பதைப் பெரியோர்கள் ஸனாதன மதம் வைதிக மதம் எனவே அழைப்பர். பா+ரதம்= பாரதம் என்ற சொல்லுக்கும் ஆன்ம ஒளியில் ஒளிரும் நாடு எனவும் பொருள் உரைப்பர்.

**5. வேதம் என்றால் என்ன?**

வேதம் என்ற சொல் அறிதல் அல்லது அறிவித் தல் என்ற பொருள் கொண்ட சொல்லின் அடிப் படையில் தோன்றிய சொல்லாகும். அதாவது காட்சி அளவை முதலிய அளவைகளைக்கொண்டு அறிய முடியாத உண்மைக் கருத்துக்களை எடுத் துக் காட்டுவதே வேதமாகும். இதற்கு ஒத்து, எழுதாக்கிளவி, செவிச்செல்வம், மறை என்றெல் லாம் வேறு பெயர்கள் உண்டு. காதால்கேட்டே மனத்தில் கொள்ளவேண்டிய நூலான படியால், வேதத்தை சுருதி எனவும் கூறுவார்கள். வேதத் திற்கு வாய்மை+மொழி=வாய்மொழி எனவும் பெயருண்டு.

**5. அதன் பிரிவுகள் யாவை? யார் பிரித்தார்?**

ருக்-யஜுர்-சாம-அதர்வணம் என நான்குவகை. இவ்வாறு பிரித்தவர் "வியாசர்" என்ற முனிவ ராவார். வியாசர் என்ற சொல்லிற்கே பிரித்த வர் என்று பெயர். வேதத்தைப் பிரித்து வகைப் படுத்தியதால் அவருக்கு வேத வியாசர் எனவும் பெயர் ஏற்பட்டது. வியாசர் என்ற சொல் பதவியின் பெயரே அன்றி ஒரு தனிப்பட்டவரின் பெயரல்ல.

**7. வேதத்தின் செழும் பொருள் என்ன?**

ஆன்ம நேயம், ஒருமைப்பாடு, இறைப்பற்று, கடமை உணர்வு முதலியனவாகும். மேலும், வைணவர்கள் வேதச் செழும்பொருளாய்த் திருமாலையும் கூறுவார்கள். வேதைச்சஸர்வை: அஹமே வவேத்ய: இது பகவத் கீதையின் அருள் மொழி.

**8. "ருக்வேதம்" சிறப்பென்ன?**

4 வேதங்களிலும் பழமையானது. இதில் 10 மண்டலங்களும், 10,552 மந்திரங்களும் உள் ளன. மந்திரங்கள் செய்யுள் வடிவமுள்ளவை. ருக் வேதம் ஓதுபவருக்கு "ஹோதா" எனப் பெயர்.

**9. "யஜுர்வேதம்" சிறப்பென்ன?**

இதில் உள்ள மந்திரங்கள் வசன நடையில் உள் ளவை. இதில் 40 அத்தியாயங்களும், 1975 மந்திரங்களும் உள்ளன. யஜுர்வேதம் ஓதுபவ ருக்கு அத்வர்யு எனப் பெயர்.

**10. "சாமவேதம்" சிறப்பென்ன?**

இது இறைவனுக்கு மிக உகந்த கானரூபமான வேதம், இதில் உள்ள மந்திரங்களின் எண்ணிக் கை 1875-ஆகும். பெரும்பாலான சாமவேத மந்திரங்கள் ருக்வேத மந்திரங்களாகும். இசைக் கலைக்கு சாமவேதம் மூலம் எனவும் சொல்வார் கள். இதை ஓதுபவருக்கு உத்காதா எனப் பெயர்.

# திருப்பதியில் தங்குவசதி விவரங்கள்

| | அறைகளின் எண்ணிக்கை | வாடகை | நாள் ஒன்றுக்கு |
|---|---|---|---|
| I ஸ்ரீநிவாசா சத்திரம் (முதல் சத்திரம்) பேருந்து நிலையத்திற்கு அருகில். | | | |
| (i) மேஜை நாற்காலிகள் மற்றும் இரண்டுபடுக்கை வசதிகளைக் கொண்டது | 30 | ரூ. 12/– | ,, |
| (ii) மேஜை நாற்காலிகள் மற்றும் நான்கு படுக்கை வசதிகளைக் கொண்டது. | 18 | ரூ. 15/– | ,, |
| (iii) மேஜை நாற்காலிகள் ஒருபடுக்கை வசதி கொண்டது. | 39 | ரூ. 10/– | ,, |
| II ஸ்ரீ வேங்கடேஸ்வரா விருந்தினர் விடுதி | | | |
| மேஜை நாற்காலிகள் மற்றும் இரண்டு படுக்கை வசதிகளைக் கொண்டது. | 16 அறை தொகுதிகள் | ரூ. 16/– | ,, |
| III ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி | | | |
| (i) மேஜை நாற்காலிகள் மற்றும் இரண்டு படுக்கை வசதிகளைக் கொண்டது. (குளிர்ச்சாதனம் பொருத்தப்பட்டது) | 10 அறைதொகுதிகள் | ரூ. 40/– | ,, |
| (ii) மேஜை நாற்காலிகள் மற்றும் ஒரு படுக்கை வசதி கொண்டது (குளிர்சாதனம் பொருத்தப் பட்டது) | 2 அறைதொகுதிகள் | ரூ. 30/– | ,, |

## ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி கோயில், திருப்பதி.

| அர்ஜித சேவைகள் | கட்டணம் | நேரம் |
|---|---|---|
| 1. அபிஷேகம் | ரூ. 1/- நபர் ஒருவர்க்கு | காலை 9-30 முதல் 10-00 வரை |
| 2. ஸகஸ்ரநாமா அர்ச்சனை | ரூ. 1/- நபர் ஒருவர்க்கு | மாலை 5-00 முதல் 6-00 வரை |

### பிரஸாத கட்டண விவரங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1) | புளியோதரை | — | ரூ. 50-00 |
| 2) | பொங்கல் | — | ரூ. 55-00 |
| 3) | தத்யோதனம் | — | ரூ. 40-00 |
| 4) | சர்க்கரைப் பொங்கல் | | ரூ. 65-00 |
| 5) | தோசை | — | ரூ. 35-00 |
| 6) | ஸீரா | — | ரூ. 155-00 |
| 7) | கேஸரிபாத் | — | ரூ. 85-00 |

வாசகர்களே !

பக்தர்களே ! !

நீங்களோ அல்லது உங்கள் நண்பர்களோ பலமுறை திருமலைக்கு வருகை புரிந்திருக்கலாம். அவ்வாறு மேற்கொள்ளப்பட்ட திருமலை யாத்திரையின்போது நீங்களோ அல்லது மற்றவர்களோ திருமலை சம்பந்தப்பட்ட அதிசய உண்மை நிகழ்ச்சிகளை உணர்ந்திருக்கலாம் அல்லது பார்த்திருக்கலாம். அப்படிப்பட்ட நிகழ்ச்சிகளை ஸப்தகிரிக்கு, அரைப்பக்கத்திற்கு மிகாமல் எழுதி அனுப்புங்கள். பிரசுரிக்கப்படும் நிகழ்ச்சிகளுக்கு தகுந்த சன்மானம் வழங்கப்படும். உண்மையாக உணர்ந்தவற்றை, உண்மை அனுபவத்தை மட்டுமே எழுதி அனுப்புதல் வேண்டும். ஆ-ர்

# இராசி பலன்

Dr. டி. அர்க்கசோமயாஜி, M.A., Phd.
திருப்பதி.

(1-4-81 முதல் 30-4-81 வரை)

## மேஷம்

(அசுவனி, பரணி, கார்த்திகை முதல் பாதம் முடிய)

அனுவசியமான செலவுகள் அல்லது பண நஷ்டம்; குடும்பத்திலும், வெளியுலகிலும் கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதல். எனினும் மாதத்தின் இரண்டாம் 15 நாட்களின் போது ஆடை ஆபரணங்கள் கிடைக்கப் பெறல், கேளிக்கைகளில் ஈடுபடல், தவறான ஆலோசனைகளைக் கேட்பதனால் பண நஷ்டத்திற்கு உள்ளாக நேரிடும். எச்சரிக்கையாக இருப்பது நலம்.

## விருஷபம்

(கார்த்திகை 2-ம் பாதம் முதல், ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம் பாதம் முடிய)

மாதத்தின் முதல் 15 நாட்கள் நல்லனவாக அமையும். பணவரவு, புதிய ஆடை ஆபரணங்கள், நல்ல நண்பர்கள், விருந்தினர் வருகை, பெரியோர்களது பாராட்டுதல்களுக்குள்ளாதல், தன் பிள்ளைகள், புதல்வியர்க்கும் நன்மை உண்டாகும். 16-ம் தேதிக்குப்பிறகு, பணநஷ்டம் மற்றும் குடும்பத்தில் கருத்து வேறுபாடுகள்.

## மிதுனம்

(மிருக சீரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய)

மாதத்தின் இரண்டாம் பகுதியான கடைசி 15 நாட்களின் போது நன்மை பல உண்டாகும் வகையில் பணவரவு, முயற்சிகள் வெற்றியடையப் பெறல். உறவினர்கள் மூலமாக சிறிது துன்பத்திற்குள்ளாதல் அல்லது உற்றார் உறவினரிடமிருந்து பிரிவு ஏற்படல். மேலும் சிறிது மதிப்புக் கெடல் அல்லது இகழ்ச்சிக்குள்ளாதல் அல்லது ஏமாற்றத்திற்குள்ளாதல் அல்லது உடல்நலம் கெடல்.

## கடகம்

(புனர் பூசம் 4-ம் பாதம் முதல் பூசம் ஆயில்யம் முடிய)

சிறிது உடல்நலம் கெடல் மற்றும் எதிரிகள் ஏற்படல். தீய எண்ணங் கொண்டோர் துன்பங்களுக்குள்ளாக்க முயற்சிக்கலாம். எப்போதாவது பிரயாணம் மேற்கொள்ளலாம். எனினும் சமய உணர்வில் தோய்ந்து, ஒரு தெய்வீக அரவணைப்பில் உள்ளது போன்று செயற்படுவர். புதிய ஆடை ஆபரணங்கள், கேளிக்கைகளில் ஈடுபடல். மாதத்தின் இரண்டாம் 15 நாட்களின் போது நிலைமை சாதகமாக அமையும்.

## சிம்மம்

(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)

இவ்ராசிக்காரர்களுக்கு இம்மாதம் மகிழ்ச்சிகரமாக அமையாது. அதிக செலவினங்கள் அல்லது பணநஷ்டம் அல்லது மதிப்புக்கெடல் அல்லது இகழ்ச்சிக்குள்ளாதலும் கூட. புதிய ஆடை ஆபரணங்கள் கிடைக்கப் பெற்றாலும் சத்காரியங்களில் ஈடுபடுவதும், இறைவழிபாடும் மன நிம்மதியைத் தரும்.

## கன்னி

(உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய)

பெண்கள் மூலமாக துன்பங்களுக்குள்ளாதல் அல்லது குடும்பத்தில் கருத்து வேறுபாடுகள் அல்லது கண் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினால் அவதியுறல். நம்பிக்கையின் பேரிலேயே நாட்கள் கழியும். மாதத்

### அட்டைப் படவிளக்கம்

'விஷ்ணு ஸகஸ்ரநாமம்' தியான ஸ்லோகத்தின் கருத்தினை மனதிற் கொண்டு எங்கள் ஓவியர் திரு. எஸ். ஆர். உதயகிரி அவர்கள் கண்ட கற்பனைச் சித்திரம்.

ஸ்லோகத்தின் திரண்டபொருள் :

பூமியைத் தாள்களாகவும், ஆகாயத்தை நாபியாகவும், சந்திர சூரியர்களை கண்களாகவும், காற்றினை மூச்சாகவும், எண் திசைகளை காதுகளாகவும், ஆகாயத்தைக் கடந்த பிரதேசத்தினைத் தலையாகவும், நெருப்பினை முகமாகவும், கடலை படுக்கையாகவும் கொண்டு, தன்னுள்ளே மூவுலகத்தைச்சார்ந்த உயிரினங்களையும் கொண்டு, அழகுடனும் கம்பீரத்துடனும் விளங்கும் அப்பேருண்மையை, காலம் இடம் கடந்த அப்பரம் பொருளை வணங்கி உயர்கதி அடைவோமாக!

தின் இறுதி 15 நாட்கள் அலுவலகம் அல்லது மற்ற விஷயங்களில் நன்மை பயக்கும்படி அமையா. இறைவழி பாடு மன அமைதியை அளிக்கும்.

### துலா

(சித்திரை 3-ம் பாதம் முதல், ஸ்வாதி, விசாகம் 3-ம் பாதம் முடிய)

இவ்ராசிக்காரர்களுக்கு இம்மாதம் மிகவும் மகிழ்ச்சிகரமாக அமையும். குறிப்பிடத் தகுந்த எந்த விதமான நிகழ்ச்சிகள் நடைபெறுவண்ணம் நாட்கள் கழிந்து விடும். அவ்வப் போது பிரயாணம் மேற்கொள்வர். மாதத்தின் இறுதி 15 நாட்களின் போது அலுவலகம் அல்லது வெளி யுலகம் சம்பந்தப்பட்ட கருத்துவேறு பாடுகளுக்குள்ளாதல். பெண்களால் துன்பங்களுக்குள்ளாதல், வயிறு சம் பந்தப்பட்ட நோயினால் அவதியுற நேரிடுவதால் உடல்நலம் குன்றும். மொத்தத்தில் அவ்வப்போது கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதலால் மனக் கவலை கொளல்.

### விருச்சிகம்

(விசாகம் 4-ம் பாதம் முதல், அனு ஷம், கேட்டை முடிய)

பணவரவு மற்றும் வெற்றி, நல்ல நண்பர்கள், விருந்தினர் வருகை. மாதத்தின் முதல் 15 நாட்களின் போது தன் பிள்ளைகள் அல்லது புதல் வியர் காரணமாக அல்லது கருத்து வேறுபாடுகள் காரணமாகக் கவலைக் குள்ளாதல். மாதத்தின் இறுதி 15 நாட்களின் போது முயற்சிகள் வெற்றியடையப்பெறல்.

### தனுசு

(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய)

இவ்ராசியில் பிறந்தவர்களுக்கு காலம் அவ்வளவாக உதவியாக அமையாது. பணநஷ்டம் மற்றும் மதிப்புக்குறைதல். மாதத்தின் முதல் 15 நாட்களின் போது குடும்பத்தில் அல்லது வெளியுலகில் ஏற்படும் கருத்து வேறுபாடுகளுக்கு உள்ளா தல், சிறிது உடல் நலம் கெடல். மாதத்தின் இறுதி 15 நாட்களின் போது தன் பிள்ளைகள் அல்லது பெண்கள் காரணமாகக் கவலைக்குள் ளாதல். விருந்தினர் வருகை மற்றும் பெரியோர்களது பாராட்டுதல்களுக் குள்ளாதல்.

### மகரம்

(உத்திராடம் 2-ம் பாதம் முதல் திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் முடிய)

மாதத்தின் முதல் 15 நாட்களின் போது பணவரவு, புதிய ஆடை ஆபரணங்கள், நல்ல நண்பர்கள். மாதத்தின் இறுதி 15 நாட்களின் போது உடல் நலக்குறைவால் அல் லது வயிறு சம்பந்தப்பட்ட தொந் தரவுகளினால் கவலைக்குள்ளாதல். தானிய லாபம் மற்றும் பணவரவு. எனினும் சத்காரியங்களில் ஈடுபடின் நலம் பயக்கும்.

### கும்பம்

(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதை யம், பூரட்டாதி 3-ம் பாதம் முடிய)

எந்த விதமான குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியும் இம்மாதத்தில் நிகழாது. பணவரவு, நல்வாழ்வுக்குத் துணை புரியும் நல்ல நண்பர்கள், பிரயாணம் அல்லது உற்றார்உறவினருடன்பிரிவு. மாதத்தின் முதல் 15 நாட்களின் போது சில தகாத நட்புறவின்காரண மாக தீய நடவடிக்கைகளில் பங் கேற்றல் எனினும் இறுதி 15 நாட் களின் போது பணவரவு ஆயினும் சிறிது உடல் நலம் கெடல்.

### மீனம்

(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்தி ரட்டாதி, ரேவதி முடிய)

அவ்வப்போது பிரயாணம், கேளிக் கைகளில் ஈடுபடல். மாதத்தின் முதல் 15 நாட்களின் போது குடும் பத்தில் மகிழ்ச்சி. இறுதி 15 நாட் களின் போது அதிக செலவினங்கள் மற்றும் பிள்ளைகள் அல்லது புதல்வி யர் காரணமாகக் கவலைக்குள்ளாதல்.

உத்திரபிரதேசத்திலுள்ள ரிஷிகேசில் ஆந்திர ஆஷ்ரமத் திலுள்ள தி. தி. தேவஸ்தானத்தின் தங்குவசதிகளுக்கான கீழ்வரும் அறைத் தொகுதிகளுக்கு வசூலிக்கப்படும் கட்டண விவரங்கள் பின்வருமாறு :

| | அறை எண்ணிக்கை | நாள் ஒன்றிற்கு |
|---|---|---|
| குளிக்கும் வசதிகளுடன் கூடிய வி. ஐ. பி. அறைகள் | 4 | ரூ. 15/- |
| மேஜை, நாற்காலி வசதிகளுடன் கூடிய அறைகள் | 19 | ரூ. 10/- |
| சாதாரண அறைகள் | 32 | ரூ. 3/- |
| கூடங்கள் | 2 | ரூ. 11/- |

### அறிவிப்பு

சென்னை தியாகராய நகர், வேங்கட நாராயண சாலையில் உள்ள தி. தி. தேவஸ்தான தகவலறிவிப்பு நிலையத் தில், பொது மக்கள் பயனுறும் வகை யில் நூலகம் ஒன்று திறந்து வைக்கப் பட்டுள்ளது.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில், திருமலை

## தினசரி பூஜைகள், ஸர்வதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

**சனி, ஞாயிறு, திங்கள் மற்றும் செவ்வாய்க் கிழமைகளில்:**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).
3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன
3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை(தனி)
4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலுக்குள கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை,(தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை.
6-00 முதல் மதியம் 12-00 வரை : **ஸர்வதரிசனம்**
மதியம் : 12-00 முதல் 1-00 வரை : சுத்தி, 2வது அர்ச்சனை, ஏகாந்தம், 2வது மணி.
1-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**
1-00 முதல் 7-00 வரை: சர்க்கார் மற்றும் ஆர்ஜித கல்யாணோற்சவங்கள், ஆர்ஜித பிரம்மோற்சவங்கள், வாகனசேவைகள், ஊஞ்சல்சேவை முதலியன (சர்க்கார் மற்றும் ஆர்ஜித தெப்போற்சவங்கள் செவ்வாய்க்கிழமைகளில் மட்டுமே,
இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், (ஏகாந்தம்) இரவு மணி
8-00 முதல் 12-00 (நடு இரவு) **ஸர்வதரிசனம்**
12-00 முதல் 12-30 வரை : சுத்தி,ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.
12-30 நடு இரவு : ஏகாந்த சேவை (தனி)

**புதன் கிழமைகளில் (ஸகஸ்ர கலஸாபிஷேகம் நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).
3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன.
3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை(தனி)
4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை,(தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை மற்றும் ஸகஸ்ரகலஸாபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.
6-00 முதல் 8-00 வரை : ஆர்ஜித ஸகஸ்ர கலஸாபிஷேகம், சுத்தி, 2வது அர்ச்சனை (ஏகாந்தம்) 2வது மணி.
8-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்.**
**மதியம்** : 1-00 முதல் மாலை 6-00 வரை: சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவங்கள், ஆர்ஜித பிரம்மோற்சவங்கள், வாகன சேவைகள, ஊஞ்சல் சேவைகள் முதலியன
**இரவு** : 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு, கைங்கர்யங்கள், இரவு மணி முதலியன
8-00 முதல் நடுஇரவு 12-00 வரை **ஸர்வதரிசனம்.**
12-00 முதல் 12-30 வரை : சுத்தி,ஏகாந்தசேவைக்கான ஏற்பாடுகள்.
12-30 நடு இரவு : ஏகாந்தசேவை (தனி)

**வியாழக் கிழமைகளில் (ஆர்ஜித திருப்பாவாடை, பூலங்கி சேவை ஆகியவை நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).
3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன
3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை(தனி)
4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை (ஸகஸ்ரநாம அர்ச்சனை (தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல்மணி, பலி, சாத்துமுறை.
6-00 முதல் 8-00 வரை : சாலிம்பு, 2வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடை அலங்காரம், மணி முதலியன.
8-00 முதல் மாலை 6-00 வரை : **ஸர்வதரிசனம்**
மதியம் 1-00 முதல் மாலை 6-00 வரை : சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவம், ஆர்ஜித பிரம்மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன.
மாலை 6-00 முதல் இரவு 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், பூலங்கி சமர்ப்பணை, இரவுமணி முதலியன.
இரவு 8-00 முதல் 12-00 வரை : **பூலங்கி ஸர்வதரிசனம்**
12-00 முதல் 12-30 வரை : சுத்தி, ஏகாந்தசேவைக்கான ஏற்பாடுகள்.
12-30 நடு இரவு : ஏகாந்தசேவை (தனி)

**வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)**

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)
3-30 முதல் 5-00 வரை : சாலிம்பு, சுத்தி, நித்ய கட்டளை கைங்கர்யங்கள், காலை முதல் மணி, அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.
5-00 முதல் 7-00 வரை : அபிஷேகம (தனி)
7-00 முதல் 8-30 வரை : சமர்ப்பணை முதலியன
8-30 முதல் 9-30 வரை : தோமால சேவை அர்ச்சனை (தனி)
9-30 முதல் 10-00 வரை : 2வது மணி, பலி, சாத்துமுறை முதலியன
10-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**
மதியம 1-00 முதல் மாலை 6-00 வரை : சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவம், ஆர்ஜித பிரம்மோற்சவங்கள், வாகனசேவைகள், சர்க்கார் மற்றும் ஆர்ஜித ஊஞ்சல் சேவை முதலியன,
இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள் இரவு மணி முதலியன.
8-00 முதல் இரவு 12-00 வரை **ஸர்வதரிசனம்**
12-00 முதல் 12-30 வரை : சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.
12-30 நடு இரவு : ஏகாந்தசேவை (தனி)

Regd. No. H/TRP/12 தனிப்பிரதி 50 காசு

ஸ்ரீ வேங்கடேஸ்வர பரப்ரஹ்மணே நம:

# நீ ஓர் இந்து - அதற்காகப் பெருமைப்படு !
# பெருமை வாய்ந்த சரித்திரம் உனக்குள்ளது; அதனை மறவாதே !
# அரும்பெரும் தத்துவக்கருத்துக்களை அடிப்படையாகக் கொண்ட
# பேரியக்கம் இந்து சமயம்

உண்மையான ஓர் இந்துவாக செயற்படு — **கீழ்வருவனவற்றைக் கடைப்பிடி**

✠ உனக்கு விருப்பமான சமயக்குறியை (திலகம், சந்தனப்பொட்டு, விபூதி, நாமம்) நெற்றியில் இட்டுக் கொள்ளும் பழக்கத்தை மேற்கொள்.

✠ தினம் குறைந்தபட்சம் ஒரு முறையாவது ஸ்நானத்திற்குப் பிறகு இறைவனின் நாமத்தை ஜெபிக்கவும்.

**கீழே கொடுக்கப்பட்டுள்ள நாமங்களில் ஒன்றை அல்லது ஒருசிலவற்றையாவது தேர்ந்தெடு**

ஓம் ஸ்ரீ வேங்கடேஸாய நம:

ஓம் நமோ பகவதே வாசுதேவாயா

ஓம் நமோ நாராயணாய

நமசிவாயா

ஹரே ராம ஹரே ராம ராமராம ஹரேஹரே

ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண கிருஷ்ணகிருஷ்ண ஹரேஹரே

✠ தினந்தோறும் ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதத்தின் குறைந்தபட்சம் 10 ஸ்லோகங்களை பாராயணஞ்செய்.

✠ வாரத்திற்கு ஒரு முறை உன் குடும்பத்தாருடன் உனக்கு விருப்பமான கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபடு.

✠ உங்கள் வீட்டிற்கு முன் 'ஓம்கார்' எனும் முத்திரையினை ஒட்டவும்.

✠ தினந்தோறும் பகவத்கீதையில் குறைந்தபட்சம் ஒரு ஸ்லோகத்தையாவது பாராயணஞ்செய்.

✠ சமுதாய சமய விழாக்களில் ஏதாவது ஒருவகையில் பங்கேற்றுக்கொள்.

---

அவனை நம்பு - அவன் உன்னைக் காப்பான்

---

## திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.